ஸ்ரீ:

ஸ்ரீமதே ஸ்ரீலக்ஷ்மீந்ருஸிம்ஹ பரப்ரஹ்மணே நம:

# பதிப்பாளரின் பணிவுரை

**लोकोपकारमत्येवम् आशौचशतकं मुदा ।**
**प्रकाशयामि सख्याख्यं प्राज्ञा गृह्णन्तु सादरम् ॥**

**பூர்வர்கள் செய்த பேருதவிகள்:—**

நம்முடைய முன்னோர்கள் நமக்கு நிலையான பேருதவிகள் பல பல செய்துள்ளனர். அவற்றை நாம் நினைவில் கொண்டு அவற்றால் பயன் பெற முயலவேண்டும்.

அவர்கள் பலருக்கு உபதேசம் செய்தும், க்ரந்தங்கள் பலவற்றை இயற்றியும் மிகவும் ஸூக்ஷ்மங்களான பல தத்த்வங்களையும் தர்மங்களையும் விளக்கியுள்ளனர்.

அவர்களுடைய உபதேசம் அந்தக் காலத்தில் இருந்தவர்க்கு மட்டுமே பயன் தரவல்லது. பின்னோர்களாகிய நமக்கு அது பயன்படாது. அப்படிப்பட்ட நமக்கும் பயன் தரக்கூடியவை அவர்கள் இயற்றிய க்ரந்தங்களேயாம்.

அவற்றையும் - தத்த்வங்களை போதிக்கும் க்ரந்தங்கள் என்றும், தர்மங்களை போதிக்கும் க்ரந்தங்கள் என்றும் இரண்டு விதங்களாகப் பிரிக்கலாம்.

இவற்றுள் 'தர்மங்களை போதிக்கும் க்ரந்தங்களே மிகச் சிறந்தன' என்று மஹான்கள் பலருடைய திருவுள்ளம்.

அதை அடியொற்றியே தற்போது இந்த ஆசௌச சதகம் என்ற ப்ரஸித்தமான க்ரந்தம் தமிழ் உரையுடன் வெளியிடப்படுகிறது.

**க்ரந்தகர்த்தாவின் பெருமை:—**

ஒரு க்ரந்தத்திற்கு விஷயத்தினுல் வரும் பெருமையை விட அதன் கர்த்தாவினுல் வரும் பெருமையே பெரிதாகும்.

இந்த முறையில் இந்த ஆசௌசசதகத்தை இயற்றியவர் மிக்க பெருமை பெற்றவர் ஆவார்.

'**ஸ்ரீ வேங்கடநாதன்**' என்பது இவருக்கு மாதாபிதாக்கள் வைத்த திருநாமம்.

'**வைதிகஸார்வபௌமர்**' என்பது இவருக்கு ஏற்பட்ட சிறப்புப் பெயர்.

ஹாரீதகுலத்தைச் சேர்ந்தவர் இவர். இவருடைய வம்சமே வைதிகமார்கத்தை விட்டு வழுவாததாகும்.

'**ஸரஸ்வதீவல்லபர்**' என்பவர் இவருடைய பிதாமஹர். **ஸ்ரீரங்கநாதஸூரி** என்பவர் இவருடைய பிதா.

இவர் இயற்றிய க்ரந்தங்களின் முடிவில் உள்ள வாக்யங்களால் இவ்வரலாறு தெரிய வருகிறது.

தசநிர்ணயம் என்ற க்ரந்தத்தின் முடிவில்

**आशौचपूर्वशतकं पितृमेधसारं**
**व्याख्यां तयोश्च दशनिर्णयगृह्यरत्ने ।**
**रत्नाकरं विबुधकण्ठविभूषणं च**
**प्राह प्रबन्धमिति वैदिकसार्वभौमः ॥**

என்று இவர் இயற்றிய ச்லோகத்தினுல், ஆசௌசசதகம், இதற்கு வ்யாக்க்யானமான ஆசௌசநிர்ணயம், பித்ருமேதஸாரம், இதற்கு வ்யாக்க்யானமான ஸுதீவிலோசநம், ஸ்ம்ருதிரத்நாகரம், தசநிர்ணயம், க்ருஹ்யரத்நம், இதற்கு

வ்யாக்க்யானமான கண்டபூஷணம் ஆகிய எட்டு க்ரந்தங்கள் இவரால் இயற்றப்பட்டுள்ளன என அறியப்படுகிறது.

இந்த ச்லோகத்தில் இவர் தம்மை 'வைதிகஸார்வபௌமர்' என்று குறிப்பிடுவதையும் காணலாம்.

இவற்றுள் பித்ருமேதஸாரம், ஸுதீவிலோசநம் என்ற இரண்டு க்ரந்தங்களும் 'அந்த்யேஷ்டி' (தஹனம்) முதலான அபரக்ரியைகளை விளக்குகின்றன.

க்ருஹ்யரத்னம் கண்டபூஷணம் இரண்டும் கர்பாதாநம் பும்ஸவநம் முதலான ஸம்ஸ்காரங்களை விளக்குகின்றன.

ஸ்ரீஜயந்தி - உபாகர்மம் முதலான பத்து விஷயங்களின் நிர்ணயத்தை விளக்குகின்றது 'தசநிர்ணயம்'.

நாள்தோறும் அநுஷ்டிக்க வேண்டிய விஷயங்களை விவரிக்கின்றது ஸ்ம்ருதிரத்நாகரம்.

ஆசௌசசதகமும், அதன் வ்யாக்க்யானமான ஆசௌச-நிர்ணயமும் ஜ்ஞாதிமுதலியவர்களின் ஜனனம் - மரணம் ஆகியவற்றால் வரும் தீட்டின் காலங்களைச் சொல்லுகின்றன.

ஆக ஆஸ்திகராய் இருப்பவர் யாவரும் ஆதரித்து அறிந்து கொள்ள மிகவும் இன்றியமையாதன இந்த எட்டு க்ரந்தங்களும்.

இவற்றுள் இப்பொழுது ஆசௌசசதகம் எளிய தமிழ் உரையுடன் யாவரும் புரிந்து கொள்ளும் படிக்கு ஏற்றதாக வெளிவருகிறது. இவ்வாறே மற்றைய க்ரந்தங்களையும் வெளியிட விருப்பம் இருக்கிறது. எம்பெருமான் நிறைவேற்றி வைக்க வேண்டும்.

இவற்றை இயற்றிய இந்த வைதிகஸார்வபௌமர் மிக்க ஜ்ஞானம் பெற்றவர். இதை

वेदेऽद्वितीयः स्मृतिषु प्रवीणः
वेदान्तविश्रान्तमनाः श्रुतेषु ।
सुधीस्सदाचारनिधिस्समिन्धे
यजुर्निधिर्वैदिकसार्वभौमः ॥

என்று கண்டபூஷணக்ரந்தத்தின் முடிவில் இவர் இயற்றிய ச்லோகத்தினுல் நன்கு அறியலாம்.

வேதத்தில் ஒப்பற்றவர்; ஸ்ம்ருதிகளில் நிபுணர்; வேதாந்தங்களில் தேர்ந்த புத்தியுடையவர்; கேள்வி அறிவினுல் சிறந்தவர்; ஸதாசாரங்களுக்கும் குறிப்பாக யஜுர்வேதத்திற்கும் இருப்பிடமானவர். இவ்வாறு இந்த வைதிகஸார்வபௌமர் விளங்குகிறுர் என்கிறது இந்த ச்லோகம்.

பின்புள்ள வைத்யநாதர் முதலான ஸ்ம்ருதிகாரர்களும் கூட இவருடைய வசனங்களைத் தங்கள் க்ரந்தங்களில் எடுத்துக் காட்டும் படியான பெருமை வாய்ந்தவர் இவர்.

ஆக இத்தகைய பெருமை பெற்றவரே இம்மாதிரியான தர்மசாஸ்த்ரங்களை இயற்ற ஏற்றவராவார்.

## இவரை வைதிகஸார்வபௌமராக்கிய ஸார்வபௌமர்:—

இப்படிப்பட்ட மஹானை வைதிகஸார்வபௌமராக்கிய ஸார்வபௌமர் வேறு ஒருவர் இருக்கிறுர். அவர்தான் ஆசார்யஸார்வபௌமரான ஸ்ரீமத் ஆதிவண் சடகோப யதீந்த்ரமஹாதேசிகன்.

ஸ்ரீமத் அஹோபிலமடத்தைத் தோற்றுவித்த முதல் ஸ்ரீமத் அழகியசிங்கர் இந்த மஹான்.

இந்தப்பரம்பரையில் 33வது பட்டத்தில் ஸுப்ரஸித்த வைபவராய் எழுந்தருளியிருந்த ஸ்ரீ சடகோயதீந்த்ரமஹா-தேசிகன் தாம் அருளிய ஸத்ஸம்ப்ரதாயமுக்

என்னும் ஸ்ரீ ஸந்நிதி குருபரம்பராப்ரபாவத்தை விவரிக்கும் க்ரந்தத்தில் 35வது பக்கத்தில் இந்த வைதிகஸார்வபௌமர் விஷயமான சில வ்ருத்தாந்தங்களை அருளியுள்ளார். அங்குள்ள வாக்யங்கள் இவையே --

''இப்படி ஸ்ரீமத் ஆதிவண்சடகோபயதீந்த்ரமஹா-தேசிகன் ஸித்தாந்தப்ரவசனம் பண்ணிக்கொண்டு வருங்-காலத்தில்

'यच्छिष्याग्र्यो वैदिकानां सार्वभौमत्वमेत्य च ।
रत्नाकरादीन् कृतवान् ...................... ।।'

'யச்சிஷ்யாக்ர்யோ வைதிகாநாம் ஸார்வபௌமத்வம் ஏத்ய ச। ரத்நாகராதீந் க்ருதவாந்........................ ॥'
என்கிறபடியே ஸ்ம்ருதிகர்த்தாவாய் இருக்கிற மணற்பாக்கம் தோழப்பரும் இந்த ஸ்ரீ ஆதிவண்சடகோபயதீந்த்ர மஹாதேசிகன் திருவடிகளிலே வந்து ஆச்ரயித்துப் பஞ்ச ஸம்ஸ்காரம் முதலாய், ஸ்ரீபாஷ்யம், பகவத்விஷயம், ஸ்ரீமத்ரஹஸ்யத்ரயஸாரம் ஆகிய தர்சநார்த்தங்களை எல்லாம் அதிகரித்தருளி, மஹா மேதாவியாய் இருக்க, ஸ்ரீ ஸ்வாமியும் இவரை நோக்கி 'நீர் லோகோபகாரார்த்தமாக ஸ்ரீவைஷ்ணவர்கள் எல்லோரும் ஸுலபமாக அறிந்து அனுஷ்டிக்கும்படிச் சில தர்மசாஸ்த்ரங்களைப் பண்ணும்' என்று நியமிக்க தோழப்பரும் அந்த நியமனப்படிக்கு

''ஆசௌசபூர்வசதகம் பித்ருமேதஸாரம்
வ்யாக்க்யாம் தயோச்ச தசநிர்ணயக்ருஹ்யரத்நே ।
ரத்நாகரம்விபுதகண்டவிபூஷணஞ்ச
ப்ராஹ ப்ரபந்தம் இதி வைதிகஸார்வபௌம: ॥''

என்கிறபடியே எட்டு க்ரந்தங்களைச் செய்தருளி ஸ்ரீமத் ஆதிவண்சடகோப யதீந்த்ரமஹாதேசிகன் திருமுன்பே வைக்க, ஸ்ரீஸ்வாமியும் இவைகளைக் கடாக்ஷித்து உகந்து, 'நீர் வைதிகஸார்வபௌமர் காணும்' என்று திருநாமம் ப்ரஸாதித்தருளினார். அன்று முதல் தோழப்பருக்கு 'வைதிகஸார்வபௌமர்' என்று திருநாமம் ஆயிற்று'' என்று.

ஆக இவருடைய காலம் ஸ்ரீமத் ஆதிவண்சடகோப யதீந்த்ரமஹாதேசிகனுடைய காலமான பதினான்காவது நூற்றாண்டேயாகும் என்பதும் இதனால் வெளிப்படை. ஸார்வபௌமர் எல்லாப் பூமியையும் தன் கீழ்க்கொண்டு ஆளும் பேரரசர். இங்கே இந்தச் சொல் 'சிறந்தவர்' என்ற பொருளில் 'வைதிகர்களுள் சிறந்தவர்' என்ற அர்த்தத்தைக் குறிக்கிறது.

இவ்வாறு இந்த க்ரந்தகர்த்தா ஆசார்யஸார்வபௌமரான ஸ்ரீமத் ஆதிவண் சடகோப யதீந்த்ர மஹாதேசிகனால் வைதிக ஸார்வபௌமராகக் கொண்டாடப்பட்டார். பின்னர் உலகமும் அவ்வாறே இவரைக் கொண்டாடி வரலாயிற்று.

இந்த வரலாற்றினால் 'வருங்கால ஸந்ததியினரான ஆஸ்திகர்களும் தர்மஸூக்ஷ்மங்களை அறிந்து அனுஷ்டித்து ச்ரேயஸ்ஸுக்களைப் பெறவேண்டும், அதற்கான வழிகளை வகுக்க வேண்டும்' என்றவாறான சிந்தைகள் நம் பூர்வர்களுடைய திருவுள்ளத்தில் ஊன்றியிருந்தமையும், அதற்கான நல்வழிகளைத் தாங்களே செய்தமையும், தகுதி வாய்ந்த பிறரைக் கொண்டு செய்வித்தமையும் நன்கு புலனாகின்றன. ஆகவே அவ்வாறே தற்காலத்தில் உள்ள பண்டிதர்களும் செல்வர்களும் பிற்காலத்தவர்களுக்குத் தம்மாலியன்றவரை நல்வழிகளை வகுக்க வேண்டும். வருங்காலம் இம்மாதிரி விஷயங்களில் மிகவும் இருண்டிருக்கும். அந்தப் பேரிருளைப் போக்க முன்னோர்கள் ஏற்றி வைத்துள்ள இம்மாதிரியான க்ரந்ததீபங்களை மேலும் சுடர் விட்டு ப்ரகாசிக்கச் செய்ய வேண்டும். அதற்கான வழிகளையும் வகுக்க வேண்டும்.

**காற்றுள்ளபோதே தூற்றிக் கொள்ளவேண்டும்: --**

தக்ககாலம் வாய்க்கும் போது அதைப் பயன் படுத்திக் கொண்டு வாழவேண்டும் என்பதையே மேலே காட்டிய தலையங்கம் உணர்த்துகிறது. நாள்தோறும் நம் ஸம்ப்ரதாயங்களும் ஆசாரமும் நம்மிடையே குறைந்து கொண்டே வருகின்றன. இவற்றையறிந்த மஹான்களும் மறைந்து

கொண்டே வருகின்றனர். ஸமீபகாலமாக மறைந்த மஹான்களுடைய ஸ்தானங்களைப் பூர்த்தி செய்யத்தக்கவர்கள் இல்லாமலேயே அவை சூன்யங்களாகவே இருந்து வருகின்றன.

இந்த நிலையில் 'தற்போதுள்ள மஹான்களைக் கொண்டு வருங்கால ஸந்ததியினரும் நல்ல விஷயங்களை—தர்மஸூக்ஷ்மங்களை அறிந்து அனுஷ்டிப்பதற்கு ஏற்ப அவர்களுக்கு ஒரு நல்வழி வகுக்க வேண்டும்' என்ற எண்ணம் அடியேன் மனத்தில் சிலகாலமாக வேரூன்றி வளர்ந்து வருகிறது.

இதன் பயனுய்த்தான் 'ஸ்ரீவைஷ்ணவஸதாசாரநிர்ணயம்' என்ற ஆஹ்நிகக்ரந்தத்திற்குத் தமிழில் விரிவுரையும், ஸம்ஸ்க்ருதத்தில் டிப்பணியும் எழுதும் பெரும்பணி தொடங்கப்பட்டு இன்னும் இரண்டு மூன்று மாதங்களில் பூர்த்தியடையும் தருவாயில் உள்ளது. ஸ்ரீமத் இஞ்சிமேட்டு அழகிய சிங்கர் ஸாதித்த அபூர்வங்களான பல விஷயங்களைப் பின்னூரும் அறியும்படிச் செய்வதற்காகத்தான் இந்த முயற்சி மேற்கொள்ளப்பட்டது.

இதன் நடுவில் தான் ஆசௌசசதகத்தைத் தமிழ் உரையுடன் வெளியிடவிரும்பினேன். அந்த விருப்பம் நிறைவேறி இன்று இதை வெளியிடுகிறேன்.

தகுதி உள்ளவர்கள் க்ரந்தங்களை எழுதுவதால் உலகுக்கு உண்டாகும் உபகாரத்தை விடத் தகுதியில்லாதவர்கள் இந்த மாதிரி விஷயங்களில் தலையிடாமல் இருப்பதால் உண்டாகும் உபகாரமே மிகச் சிறந்ததாகும். இதை அடியேன் நன்கு அறிவேன். அதனுல் தான் ஸ்ரீ. உ. வே. மஹாவித்வான், மேல்பாக்கம், நரஸிம்ஹாசார்யஸ்வாமியைக் கொண்டு உரை எழுதச் செய்தேன்.

இந்த ஸ்வாமி மஹாவையாகரணர். சிறந்த வேதாந்தஜ்ஞானமும் வேதாத்யயனஸம்பத்தும் பெற்றவர். ஸூக்ஷ்மாசாரங்களை நன்கு அறிந்து, பிறர்க்கு அவற்றை

அறிவிப்பதிலும் அநிதரஸாதாரணமான பாண்டித்யம் உள்ள வர். ஸ்ரீமத் இஞ்சிமேட்டு அழகியசிங்கர் ஸந்நிதியிலும், மற்றும் மஹான்கள் பலர் பக்கலிலும் பல ஸூக்ஷ்மதர்மங் களைக் கேட்டு அறிந்தவர்.

ஸ்ரீந்ருஸிம்ஹப்ரியாவில் கேள்வி - பதில் பகுதியில் பல தர்மஸூக்ஷ்மங்களை எழுதிப் பலருடைய பாராட்டைப் பெற்றவர். ஆகவே இந்த ஸ்வாமி எழுதிய உரை என்றால் இதை யாவருமே ஆதரிப்பார்கள் என்பது திண்ணம். ஆக இந்த ஸ்வாமியின் காலத்தில் இருக்கும் நாம் இந்த ஸ்வாமியை நன்கு பயன் படுத்திக் கொள்ளவேண்டும்.

## இந்த க்ரந்தத்தின் முக்யத்வம்

இந்தக் கலி காலத்தில் மற்றைய தர்மங்களை முழுவதும் அநுஷ்டிக்க முடியாமற் போனாலும் ஆசௌசத்தை (தீட்டை) யாவது குறைக்காமல் அநுஷ்டிப்பது ஆவச்யகமாகும். இந்தக் கலிகாலத்தில் தீட்டின் காலஅளவைக் குறைக்கவே கூடாது. பூர்ணமாகவே அநுஷ்டிக்கவேண்டும் என்பதை இந்த க்ரந்தத்தில் 'न कर्तव्यं न कर्तव्यम् अघसंकोचनं कलौ' (ந கர்த்த) வ்யம், ந கர்த்தவ்யம் அகஸங்கோசநம் கலௌ) என்று வைதிகஸார்வபௌமரே கூறுகிறார்.

வேறு சில ஸ்ம்ருதிகளில் ஆசௌசத்தைக் குறைந்த தினங்களில் அநுஷ்டிக்கும்படிச் சொன்னாலும், மநுஸ்ம்ருதி முதலானவற்றில் அதிக நாட்கள் ஆசௌசம் அநுஷ்டிக்கும் படிச் சொல்லியிருப்பதால் இதை அதிக நாட்களில் அநுஷ் டிப்பதைத் தான் கொள்ள வேண்டும். சில ஸ்ம்ருதிகளைக் கொண்டு தீட்டைக் குறைக்கக் கூடாது. அதுவும் கலியில் தீட்டைக் குறைப்பது கூடவே கூடாது என்கிறார்.

இப்படிப்பட்ட ஆசௌசத்தின் தத்த்வத்தைப் புரிந்து கொள்ள இந்த க்ரந்தம் மிகவும் பயன்படும்.

இந்த ஆசௌசசதகத்திற்கு வைதிகஸார்வபௌமரே ஸம்ஸ்க்ருதத்தில் ஒரு வ்யாக்க்யானம் அருளியுள்ளார்.

ஆனால் அது தெலுங்கு லிபிகளில் அச்சாகியிருப்பதால் பல ருக்குப் பயன் படாமலிருக்கிறது.

பிறகு ஆத்ரேயகோத்ரத்தைச் சேர்ந்த ஸ்ரீவேங்கட நிவாஸார்யர் என்பவர் மணிப்ரவாளத்தில் ஒரு வ்யாக்க்யானம் செய்துள்ளார். அது 1898ம் வருஷத்தில் க்ரந்தாக்ஷரத்தில் அச்சாகியுள்ளது. அதுவும் தற்போது கிடைப்பதில்லை.

இந்த இரண்டு வ்யாக்க்யானங்களிலும் உள்ள அர்த்த விசேஷங்களையும் கொண்டு மற்றும் பல அபூர்வவிஷயங்களையும் விளக்குவதால் இந்த வ்யாக்க்யானம் சிறந்து விளங்குகிறது. இதைப்படித்துப்பார்த்தால் இது எளிதில் புலனாகும்.

ஆஸ்திகர்களான ஸ்ரீ. உ. வே ஸ்ரீ சைலராகவாசார்யர் (விழுப்புரம் அட்வொகேட்), அவர்தம்பி ஸ்ரீ. உ. வே. K. S. வரதராஜன் (ஆடிடர் சென்னை) இவர்களுடைய உதவியால் இந்தப்புஸ்தகம் வெளியிடப்படுகிறது.

अन्या अपि कृतीरस्य सर्वलोकशुभावहाः ।
प्रकाशयितुमिच्छामि वयतां मे श्रियः पतिः ॥

மாம்பலம்
சென்னை.
1—1—1989

வில்லிவலம் க்ருஷ்ணமாசார்யன்

சுபம்

ஸ்ரீ:

# க்ருதஜ்ஞதாநிவேதனம்

ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு முக்யமாகத் தெரிந்து கொள்ள வேண்டியவைகளில் ஆசௌசமும் (தீட்டும்) ஒன்று. எந்த நற்கார்யங்களைச் செய்தாலும் சுத்தியுள்ளவன் செய்தால் தான் அது முறைப்படி ஸரியாக ஆகும். இல்லாவிடில் ஸரியான-தகுந்த பலனை அளிக்காது. தினந்தோறும் குளித்து முழுகுவதினால் மட்டும் கர்மங்களைச் செய்யத் தகுந்த சுத்தி சரீரத்திற்கு உண்டாகாது. இந்த சரீரசுத்தி சாஸ்த்ரத்தைக் கொண்டே அறியப்பட வேண்டியதாகும். தன்னுடைய பந்துக்கள், ஜ்ஞாதிகளின் பிறப்பு இறப்பு முதலிய காரணங்களினாலும் வைதிககர்மாக்களைச் செய்யத் தகுதியில்லாமையான ஓர் அசுத்தி சரீரத்திற்கு ஏற்படுவதாக தர்மசாஸ்த்ரங்கள் கூறுகின்றன.

'தோழப்பர்' என்று ப்ரஸித்தி பெற்ற வைதிக ஸார்வபௌமர் 'ஆசௌசசதகம்' என்கிற நூற்று நான்கு ச்லோகங்கள் கொண்ட இந்த க்ரந்தத்தை இயற்றுவதன் மூலம் ஆசௌசத்தின் ஸாரத்தைத் திரட்டி ஸ்ரீவைஷ்ணவர்களாகிய நமக்கு உபகரித்துள்ளார். அதற்கு ஸம்ஸ்க்ருதத்தில் விரிவான உரையையும் அவரே இயற்றியுள்ளார்.

ஷை க்ரந்தத்தை எளிய தமிழில் உரை எழுதி வெளியிட்டால் மிகவும் உபயோகமாக இருக்குமென்று சிறிது காலமாக முக்கியமாக விழுப்புரம் அட்வொகேட்டும் மிகவும் ஆஸ்திகருமான ஸ்ரீ.உ.வே. ஸ்ரீசைலராகவாசார்யரும் இன்னும் சில ஆப்தர்களும் அடியேனைக் கேட்டுக் கொண்டதைக் கொண்டு இந்த க்ரந்தத்திற்கு உரை எழுதியிருக்கிறேன். இதில் தோழப்பரின் ஸம்ஸ்க்ருத வ்யாக்யானத்தில் உள்ளவற்றில் முக்கியமானவற்றை மாத்ரம் சேர்த்து அதிகமான விரிவைத் தவிர்த்திருக்கிறேன். இதற்கு மணிப்ரவாளநடையில் 'ஆத்ரேயவேங்கடாசார்யர் என்னும்

ஸ்வாமி எழுதியிருக்கும் வ்யாக்க்யானத்தையும் பார்த்து அதிலுள்ள விசேஷங்களையும் அந்தந்த இடங்களில் சேர்த் திருக்கிறேன். இதில் அடியேனுடைய புத்திகல்பிதமாக எதுவுமின்றி பூர்வக்ரந்தகாரர்களின் அபிப்பிராயத்தையே வெளியிட்டிருக்கிறேன். [இந்த க்ரந்தத்தை அச்சிட்டுக் கொடுக்கும் பொறுப்பை ஏற்றுக் கொண்ட ஸ்ரீ உ. வே. ஸ்ரீசைலராகவாசார்யருக்கும், அவருடைய திருத்தம்பி ஆடிடர் - ஸ்ரீ. உ. வே. வரதராஜஐயங்காருக்கும்,] இந்த க்ரந்தத்தை ப்ரூப் சோதனம் செய்தும், விரிவான முகவுரை எழுதியும் உபகரித்த ஸ்ரீ அஹோபிலமடம் ஆஸ்தானவித் வான், ஸ்ரீ. உ. வே. வில்லிவலம் கிருஷ்ணமாசாரியருக்கும் அடியேனுடைய நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

மதுராந்தகம்
15-11-88 மேல்பாக்கம். **நரஸிம்ஹாசார்யர்.**

ஸ்ரீ:

# விஷயாநுக்ரமணிகை

|| சுபம் ||

श्री:

# आशौचशतकश्लोका:

## ஸ்ரீ வைதிகஸார்வபௌமர் இயற்றிய
## ஆசௌசசதக ச்லோகங்கள்

सुरासुरशिरोरत्नं ब्रह्मरुद्रादिसेवितम् ।
प्रणम्य पुण्डरीकाक्षं वक्ष्याम्याशौचनिर्णयम् ॥ १ ॥

ஸுராஸுரசிரோரத்நம் ப்ரஹ்மருத்ராதிஸேவிதம் ।
ப்ரணம்ய புண்டரீகாக்ஷம் வக்ஷ்யாம்யாசௌச
நிர்ணயம் ॥ 1 ॥

निमित्तं पिण्डदानादेः पुरुषस्थमशुद्धिकृत् ।
कालस्नानापनोद्यं यत् तदाशौचमितीर्यते ॥ २ ॥

நிமித்தம் பிண்டதாநாதே: புருஷஸ்தம் அசுத்திக்ருத் ।
காலஸ்நாநாபநோத்யம் யத் தத் ஆசௌசமிதீர்யதே ॥ 2 ॥

शावे च सूतकेऽघाख्ये कर्मणां त्याग इष्यते ।
द्रव्याण्यपि प्रदुष्यन्ति स्वाध्यायश्च निषिध्यते ॥ ३ ॥

சாவே ச ஸூதகேऽகாக்யே கர்மணாம் த்யாக இஷ்யதே ।
த்ரவ்யாண்யபி ப்ரதுஷ்யந்தி ஸ்வாத்யாயச்ச
நிஷித்யதே ॥ 3 ॥

सान्ध्यं कर्माग्निहोत्रं च प्रेतकार्याणि चाप्लुतः ।
कुर्यादन्येन होमं तु कारयेन्नान्यदाचरेत् ॥ ४ ॥

ஸாந்த்யம் கர்மாக்நிஹோத்ரஞ்ச ப்ரேதகார்யாணி
சாப்லுத: ।
குர்யாதந்யேந ஹோமம்து காரயேந் நாந்யதாசரேத் ॥ 4 ॥

न देयं न प्रतिग्राह्यमघे देयं सदापदि ।
ग्राह्यं परैश्च तत्रामं तदहर्मात्रवृत्तये ॥ ५ ॥

ந தேயம் ந ப்ரதிக்ராஹ்யம் அகே தேயம் ஸதாபதி ।
க்ராஹ்யம் பரைச்ச தத்ராமம் தத்ஹர்மாத்ர
வ்ருத்தயே ॥ 5 ॥

दधि क्षीरं घृतं शाकं [1]पटु पुष्पं तिलौषधे ।
काष्ठं मूलफले मांसं मधु कूपाम्बु चाजिनम् ।। ६ ।।

ததி க்ஷீரம் க்ருதம் சாகம் படு புஷ்பம் திலௌஷதே ।
காஷ்டம் மூலபலே மாம்ஸம், மது கூபாம்பு சாஜிநம் ।। 6 ।।

पण्यान्यघेऽपि गृह्णीयात् स्वयं तु स्वाम्यनुज्ञया ।
भक्ष्यजातं तथा पक्वमपक्वं तण्डुलादिकम् ।। ७ ।।

பண்யாந்யகேऽபி க்ருஹ்ணீயாத் ஸ்வயம் து ஸ்வாம்ய
நுஜ்ஞயா ।
பக்ஷ்யஜாதம் ததா பக்வம் அபக்வம் தண்டுலாதிகம் ।। 7 ।।

अन्नसत्ररतस्यैव ग्राह्यमित्यङ्गिरा मुनिः ।
पुण्यत्वात् पुत्रजन्माहे देयं ग्राह्यं तथा परैः ।। ८ ।।

அந்நஸத்ரரதஸ்யைவ க்ராஹ்யம் இத்யங்கிரா முநி: ।
புண்யத்வாத் புத்ரஜந்மாஹே தேயம் க்ராஹ்யம் ததா பரை:।।

अघे भोक्तुर्धियाशौचं शिष्टाहं त्वैन्दवं ततः ।
मोहात् तावदघं यावद् भुक्तं जीर्णं पतत्यघः ।। ९ ।।

அகே போக்துர்தியாऽऽசௌசம் சிஷ்டாஹம்த்வைந்தவம் தத:
மோஹாத் தாவதகம் யாவத் புக்தம் ஜீர்ணம் பதத்யத: ।।

आपत्स्वहरघे भोक्तुरिदं ज्ञातेन दोषकृत् ।
भर्तुर्यद्यदघं तत्तत् पत्न्याः स्यान्नास्य पत्न्यघम् ।।१०।।

ஆபத்ஸ்வஹரகே போக்து: இதம் ஜ்ஞாதே: ந தோஷக்ருத் ।
பர்த்துர்யத்யதகம் தத்தத் பத்ந்யா: ஸ்யாந்நாஸ்ய
பத்ந்யகம் ।।

अघिसंपर्कतोऽशौचं भवेत् तद्दिनसङ्ख्यकम् ।
न तद्द्रव्यक्रियास्त्रीणां सांपर्किकमघं भवेत् ।। ११ ।।

அகிஸம்பர்க்கதோऽசௌசம் பவேத் தத்திநஸங்க்யகம் ।
ந தத்த்ரவ்யக்ரியாஸ்த்ரீணாம் ஸாம்பர்க்கிகம் அகம் பவேத்।।

1. 'पटु शब्दः नपुंसकलिङ्गः लवणश्चाचीति मे दिन्याम् इति' बृहत्संस्कृताभिधाने' ।।

तथा नैव क्रियाद्रव्येष्वतीतं त्रिदिनाद्यघम् ।
जीवच्छ्राद्धे भवेत् स्वस्य दशाहं नेतरेष्वघम् ॥ १२ ॥

ததா நைவ க்ரியாத்ரவ்யேஷ்வதீதம் த்ரிதிநாத்யகம் ।
ஜீவச்ச்ராத்தே பவேத் ஸ்வஸ்ய தசாஹம் நேதரேஷ்வகம் ॥

आन्तं शावेऽङ्गसंस्पर्शं त्यजेत् सूतौ चतुर्दिनम् ।
स्पर्शेऽनघस्य तु स्नानं कृच्छ्रोऽस्याशौचिनः स्मृतः ॥१३॥

ஆந்தம் சாவே஽ங்கஸம்ஸ்பர்சம் த்யஜேத் ஸூதௌ சதுர்திநம் ।
ஸ்பர்சே஽நகஸ்ய து ஸ்நாநம் க்ருச்ரோ஽ஸ்யாசௌசிந: ஸ்ம்ருத: ॥ 13 ॥

अन्तःशवोऽशुचिर्ग्रामः तत्र होमादि नाचरेत् ।
वीथ्यन्तरे सदा कुर्यादेकादशधनुष्परे ॥ १४ ॥

அந்த:சவோ஽சுசிர்க்ராம: தத்ர ஹோமாதி நாசரேத் ।
வீத்யந்தரே ஸதா குர்யாத் ஏகாதசதநுஷ்பரே ॥ 14 ॥

ग्रामे चतुश्शतब्रह्मयुक्तेऽप्यन्तश्शवे क्रियाः ।
कुर्यात् स्त्रीवृषलानाथबालार्तौ चेत्यथापरे ॥ १५ ॥

க்ராமே சதுச்சதப்ரஹ்மயுக்தே஽ப்யந்தச்சவே க்ரியா: ।
குர்யாத் ஸ்த்ரீவ்ருஷலாநாதபாலார்த்தௌ சேத்யதாபரே ॥

पूजाविधौ मृतौ शेषं तन्त्रेणैव समापयेत् ।
कर्मान्तस्तु बहिर्ग्रामं प्रेतं नीत्वा तदाचरेत् ॥ १६ ॥

பூஜாவிதௌ ம்ருதௌ சேஷம் தந்த்ரேணைவ ஸமாபயேத் ।
கர்மாந்தஸ்து பஹிர்க்ராமம் ப்ரேதம் நீத்வா ததாசரேத் ॥16॥

आत्रिपूरुषमेवाघं कन्यायाः मृतिजन्मनोः ।
आसप्तपूरुषं पुंसः सापिण्ड्यं च तथा द्वयोः ॥ १७ ॥

ஆத்ரிபூருஷமேவாகம் கந்யாயா: ம்ருதிஜந்மநோ: ।
ஆஸப்தபூருஷம் பும்ஸ: ஸாபிண்ட்யம் ச ததா த்வயோ: ॥

अतः परं प्रवक्ष्यामि सपिण्डानामघं स्फुटम् ।
जन्महान्योस्तु वर्णानां दश षोडश विंशतिः ॥ १८ ॥

அத: பரம் ப்ரவக்ஷ்யாமி ஸபிண்டாநாம் அகம் ஸ்புடம் ।
ஜந்மஹாந்யோஸ்து வர்ணாநாம் தசஷோடசவிம்சதி: ॥ 18 ॥

त्रिंशत्रिशाः क्रमेणाघमित्यनेकर्षिसंमतम् ।
मुख्यकर्तुरघं तावद्यावत् प्रेतत्वमोचनम् ॥ १९ ॥

த்ரிம்சந்நிசா: க்ரமேணாகம் இத்யநேகர்ஷிஸம்மதம் ।
முக்யகர்த்துரகம் தாவத் யாவத் ப்ரேத்வமோசநம் ॥ 19 ॥

पुत्राणामप्यघं तावन्मुख्यकर्तर्यपि स्थिते ।
शिष्यश्च दासभृतकौ स्वसपिण्डात्ययादिके ॥ २० ॥

புத்ராணாமப்யகம் தாவந் முக்யகர்த்தர்யபி ஸ்திதே ।
சிஷ்யச்ச தாஸப்ருநகௌ ஸ்வஸபிண்டாத்யயாதிகே ॥ 20 ॥

गुरुस्वामिसमाशौचाः यदि तत्कुलवासिनः ।
मासार्धं वैष्णवे शूद्रे दासदास्योश्च शार्ङ्गिणः ॥ २१ ॥

குருஸ்வாமிஸமாசௌசா: யதி தத்குலவாஸிந: ।
மாஸார்த்தம் வைஷ்ணவே சூத்ரே தாஸதாஸ்யோச்ச
சார்ங்கிண: ॥ 21 ॥

युक्ता च स्त्री विजात्यूढा शुध्यते भर्तृकालतः ।
तत्पुत्राश्च मृते तस्मिन् मातृजात्युक्तकालतः ॥ २२ ॥

யுக்தா ச ஸ்த்ரீ விஜாத்யூடா சுத்யதே பர்த்ருகாலத: ।
தத்புத்ராச்ச ம்ருதே தஸ்மிந் மாத்ருஜாத்யுக்தகாலத: ॥ 22 ॥

न कर्तव्यं न कर्तव्यमघसङ्कोचनं कलौ ।
क्रमाशौचं गुणाशौचं निरस्यं दूरतः कलौ ॥ २३ ॥

ந கர்த்தவ்யம் ந கர்த்தவ்யம் அகஸங்கோசநம் கலௌ ।
க்ரமாசௌசம் குணாசௌசம் நிரஸ்யம் தூரத: கலௌ ॥ 23 ॥

स्रावाद्येव पितुः स्नानमन्येषां पतनादि तत् ।
गर्भनाशश्चतुर्मासे स्रावः पातस्ततो द्वयोः ।। २४ ।।

ஸ்ராவாத்யேவ பிது: ஸ்நாநம் அந்யேஷாம் பதநாதி தத் ।
கர்பநாச: சதுர்மாஸே ஸ்ராவ: பாதஸ்ததோ
த்வயோ: ।। 24 ।।

पाते सद्यस्तु कठिने त्र्यहं पित्रादिषु स्मृतम् ।
मृतजातेऽपि वा जातमृते वा पतनात् परम् ।। २५ ।।

பாதே ஸத்யஸ்து கடிநே த்ர்யஹம் பித்ராதிஷு ஸ்ம்ருதம் ।
ம்ருதஜாதேऽபி வா ஜாதம்ருதே வா பதநாத் பரம் ।। 25 ।।

ज्ञातीनां सूतकं पूर्णमिति हारीतशासनम् ।
त्र्यहं मासत्रये मातुर्गर्भस्रावे ततः परम् ।। २६ ।।

ஜ்ஞாதீநாம் ஸூதகம் பூர்ணம் இதி ஹாரீதசாஸநம் ।
த்ர்யஹம் மாஸத்ரயே மாது: கர்பஸ்ராவே தத: பரம் ।। 26 ।।

मासतुल्यान्हान्यूर्ध्वं षण्मासात् सूतिकाविधिः ।
चत्वारिंशद्दिनानि स्युः जनन्याः स्त्रीप्रसूतके ।। २७ ।।

மாஸதுல்யாந்ஹாந்யூர்த்வம் ஷண்மாஸாத் ஸூதிகாவிதி: ।
சத்வாரிம்சத்திநாநி ஸ்யு: ஜநந்யா: ஸ்த்ரீப்ரஸூதகே ।। 27 ।।

त्रिंशत्पुंप्रसवे ज्ञातेः दशाहमुभयोरपि ।
दशाहं दर्शनं वाक्यं सूतिकायास्त्यजेत् ततः ।। २८ ।।

த்ரிம்சத்பும்ப்ரஸவே ஜ்ஞாதே : தசாஹம் உபயோரபி ।
தசாஹம் தர்சநம் வாக்யம் ஸூதிகாயா: த்யஜேத் தத: ।।28।।

अघान्तं स्पर्शमेवेत्थं पितुस्तं यमलोद्भवे ।
सद्योऽहस्त्र्यहमादन्तादाचौलादाव्रतात् परम् ।। २९ ।।

அகாந்தம் ஸ்பர்சமேவேத்தம் பிதுஸ்தம் யமளோத்பவே ।
ஸத்யோऽஹஸ்த்ர்யஹமாதந்தாத் ஆசௌளாத் ஆவ்ரதாத்
பரம் ।। 29 ।।

पूर्णं ज्ञातिष्विति भ्रातुः पित्रोर्दशदिनं सदा ।
आचौलात् सद्य आदानाग्निशोर्ध्वमविवाहतः ॥ ३० ॥

பூர்ணம் ஜ்ஞாதிஷ்விதி ப்ராது: பித்ரோர்தசதிநம் ஸதா ।
ஆசௌளாத் ஸத்ய ஆதாநாக்நிசோர்த்வம் ஆவிவாஹத. ॥

त्र्यहं कन्यामृतौ ज्ञातिष्वघं पूर्णमृतूद्भवे ।
त्रिरात्रं वरतज्ज्ञात्योः दत्तानूढामृतावघम् ॥ ३१ ॥

த்ர்யஹம் கந்யாம்ருதௌ ஜ்ஞாதிஷ்வகம் பூர்ணம்
ருதூத்பவே ।
த்ரிராத்ரம் வரதஜ்ஜ்ஞாத்யோ: தத்தாநூடாம்ருதாவகம் ॥

पूर्णं भ्रातुश्च पित्रोश्च कन्याबालमृतौ सदा ।
कृते नामादिसंस्कारे प्राप्तकालेऽपि चाकृते ॥ ३२ ॥

பூர்ணம் ப்ராதுச்ச பித்ரோச்ச கந்யாபாலம்ருதௌ ஸதா ।
க்ருதே நாமாதிஸம்ஸ்காரே ப்ராப்தகாலேऽபிசாக்ருதே ॥ 32 ॥

स्वकाले संस्कृते प्रेते यथा तद्वदिहाप्यघम् ।
चौलात् परं भवेद् दाहो नाम्नः प्राक् खननं परम्॥३३॥

ஸ்வகாலே ஸம்ஸ்க்ருதே ப்ரேதே யதா தத்வதிஹாப்யகம் ।
சௌளாத் பரம் பவேத்தாஹோ நாம்ந: ப்ராக்கநநம் பரம் ॥

दाहो वा खननं दन्तात् परं त्यागः स वाद्य तत् ।
दाहेऽहः खनने सद्यो दन्तोत्पत्तेरनन्तरम् ॥ ३४ ॥

தாஹோ வா கநநம் தந்தாத் பரம் த்யாக: ஸ வாத தத் ।
தாஹேऽஹ: கநநே ஸத்யோ தந்தோத்பத்தேரநந்தரம் ॥ 34 ॥

खननेऽहस्त्र्यहं दाहे त्यागे वा त्र्यहमिष्यते ।
चौलात् परं त्रिरात्रं स्यात् स्वजात्युक्तं व्रतात् परम् ॥

கநநேऽஹஸ்த்ர்யஹம் தாஹே த்யாகே வா த்ர்யஹமிஷ்யதே
சௌளாத் பரம் த்ரிராத்ரம் ஸ்யாத் ஸ்வஜாத்யுக்தம்
வ்ரதாத் பரம் ॥ 35 ॥

त्रियामायास्तृतीयेंऽशे यदि जन्मर्तुमृत्यव: ।
प्रभातादि, यदि द्व्यंशे पूर्वाह्नाद्यघमिष्यते ॥ ३६ ॥

த்ரியாமாயா: த்ருதீயே஽ம்சே யதி ஜந்மர்த்தும்ருத்யவ: ।
ப்ரபாதாதி, யதி த்வ்யம்சே பூர்வாஹ்ராத்யகம் இஷ்யதே 36॥

मृताह्नाद्यघमेकाग्नेः यज्वनो दहनादि तत् ।
यज्वायज्वपुनर्दाहे शिष्टाहं यद्यघाद् बहिः ॥ ३७ ॥

ம்ருதாஹ்ராத்யகமேகாக்நே: யஜ்வனோ தஹநாதி தத் ।
யஜ்வாயஜ்வபுநர்தாஹே சிஷ்டாஹம் யத்யகாத் பஹி: ॥37॥

दशाहं त्र्यहमाशौचं, पूर्णे प्राक् चेदघाग्रहः ।
अस्थिदाहे, प्रतिकृतेः दाहे तु त्र्यहमित्यघम् ॥ ३८ ॥

தசாஹம் த்ர்யஹமாசௌசம், பூர்ணம் ப்ராக் சேதகாக்ரஹ:।
அஸ்திதாஹே, ப்ரதிக்ருதே: தாஹே து
த்ர்யஹமித்யகம் ॥ 38 ॥

सपिण्डानां, सुतानां तु दशरात्रमिहेष्यते ।
दशरात्रं सदा पित्रोः परोक्षमरणश्रुतौ ॥ ३९ ॥

ஸபிண்டாநாம் ஸுதாநாம் து தசராத்ரமிஹேஷ்யதே ।
தசராத்ரம் ஸதா பித்ரோ: பரோக்ஷமரணச்ருதௌ ॥ 39 ॥

त्र्यहं मातृसपत्न्यास्तु दशाहं वत्सरादधः ।
कृतौर्ध्वदेहिके त्वब्दे दिनं तस्यास्त्र्यहं तयोः ॥ ४० ॥

த்ர்யஹம் மாத்ருஸபத்ந்யாஸ்து தசாஹம் வத்ஸராத் அத: ।
க்ருதௌர்த்வதேஹிகே த்வப்தே திநம் தஸ்யா: த்ர்யஹம்
தயோ: ॥ 40 ॥

शिष्टाहमेव सर्वेषामपि ज्ञातेऽन्तरात्वघे ।
प्राक् संचयात् सुतस्येत्थं तदूर्ध्वं दशरात्रकम् ॥ ४१ ॥

சிஷ்டாஹமேவ ஸர்வேஷாம் அபி ஜ்ஞாதே஽ந்தராத்வகே ।
ப்ராக் ஸஞ்சயாத் ஸுதஸ்யேத்தம் ததூர்த்வம்
தசராத்ரகே ॥ 41 ॥

उत्पाद्य पुत्रं संस्कृत्य वेदमध्याप्य यः पिता ।
कुर्याद् वृत्तिं च नष्टेऽस्मिन् द्वादशाहं महागुरौ ॥४२॥

உத்பாத்ய புத்ரம் ஸம்ஸ்க்ருத்ய வேதமத்யாப்ய ய: பிதா ।
குர்யாத் வ்ருத்திம் ச நஷ்டே஽ஸ்மிந் த்வாதசாஹம் மஹாகுரௌ ॥ 42 ॥

त्रिरात्रं त्रिषु मासेषु पक्षिण्येव ततस्त्रिषु ।
ततोऽहः षट्स्वथ स्नानं दशरात्राद्यघश्रुतौ ॥ ४३ ॥

த்ரிராத்ரம் த்ரிஷு மாஸேஷு பக்ஷிண்யேவ ததஸ்த்ரிஷு ।
ததோ஽ஹ: ஷட்ஸ்வத ஸ்நாநம் தசராத்ராத்யகச்ருதௌ ॥

अत्याशौचं दिनं सद्यः त्र्यहैकाहरशौचिनोः ।
पक्षिण्यघिष्वघान्तः श्रुतस्त्वेककालोऽन्यदाप्लवः ॥ ४४ ॥

அத்யாசௌசம் திநம் ஸத்ய: த்ர்யஹைகாஹரசௌசிநோ: ।
பக்ஷிண்யகிஷ்வகாந்த: ச்ருத்ஸ்வேககாலோந்யதாப்லவ: ॥

पित्रोर्भ्रातुर्भवेन्नान्येष्वनुपेतात्ययेत्वघम् ।
पितुः स्नानं तदन्येषां न च तत् सूतकात्यये ॥ ४५ ॥

பித்ரோர்ப்ராதுர்பவேந்நாந்யேஷ்வநுபேதாத்யயேத்வகம் ।
பிது: ஸ்நாநம் தந்யேஷாம் ந ச தத் ஸூதகாத்யயே ॥ 45 ॥

कृच्छ्रादीनां समाप्तिश्चेदघे शिष्टाहमिष्यते ।
तद्बहिश्चेत् त्र्यहादि स्यादित्याह भगवान् मनुः॥४६॥

க்ருச்ச்ராதீநாம் ஸமாப்திச்சேத் அகே சிஷ்டாஹமிஷ்யதே ।
தத்பஹிச்சேத் த்ர்யஹாதி ஸ்யாத் இத்யாஹ பகவாந் மநு: ॥

सूतके तत् पुनः स्याच्चेत् शावे तद्वाथ सूतकम् ।
पूर्वेणैवोत्तरं गच्छेन्न शावं सूतकात् क्वचित् ॥ ४७ ॥

ஸூதகே தத்புந: ஸ்யாச்சேத் சாவே தத்வாத ஸூதகம் ।
பூர்வேணைவோத்தரம் கச்சேத் ந சாவம் ஸூதகாத் க்வசித்॥

पूर्वस्यान्त्यदिने तच्चेद् द्व्यहं पूर्वाघतः परम् ।
त्र्यहं पूर्वान्त्ययामे च तत्प्रभातेऽथवा यदि ॥ ४८ ॥

பூர்வஸ்யாந்த்யதிநே தச்சேத் த்வ்யஹம் பூர்வாகத: பரம் ।
த்ர்யஹம் பூர்வாந்த்யயாமே ச தத்ப்ரபாதேऽதவா யதி ॥

दीर्घाघाल्पं व्रजेन्नाल्पाद् दीर्घमित्यघसंगतौ ।
प्रभातेऽन्त्यदिने वाप्तमपैत्यल्पं तु दीर्घतः ॥ ४९ ॥

தீர்காதல்பம் வ்ரஜேந்நால்பாத் தீர்கமித்யகஸங்கதௌ ।
ப்ரபாதேऽந்த்யதிநே வாப்தம் அபைத்யல்பம் து
தீர்கத: ॥ 49 ॥

ज्ञात्यघे चेन्मृतिः पित्रोः मात्राशौचेऽथवा पितुः ।
दशाहं पित्रघे स्याच्चेत् पक्षिणी तदघात् परम् ॥५०॥

ஜ்ஞாத்யகே சேந்ம்ருதி: பித்ரோ: மாத்ராசௌசேऽதவா பிது: ।
தசாஹம், பித்ரகே ஸ்யாச்சேத் பக்ஷிணீ ததகாத் பரம் ॥ 50 ॥

स्वाशौचकालतस्त्वेव सूतिका जनकोऽग्निदः ।
शुद्धयेरन्नघयोगेऽपि न पूर्वाशौचशेषतः ॥ ५१ ॥

ஸ்வாசௌசகாலதஸ்த்வேவ, ஸூதிகா ஜநகோऽக்நித: ।
சுத்த்யேரந்நகயோகேऽபி ந பூர்வாசௌசசேஷத: ॥ 51 ॥

पित्रन्यानन्तरानेकान् दग्ध्वा पूर्वाघतः शुचिः ।
पितरौ चेद्दहेत् तत्र दशाहाच्छुचिरग्निदः ॥ ५२ ॥

பித்ர்ந்யாந் அந்தராநேகாந் தக்த்வா பூர்வாகத: சுசி: ।
பிதரௌ சேத் தஹேத் தத்ர தசாஹாத் சுசிரக்நித: ॥ 52 ॥

सूतकान्तस्तु जातस्य मृतौ शिष्टाहमिष्यते ।
पितुस्तु द्व्यहमन्त्याहे तत्प्रभाते त्र्यहं भवेत् ॥ ५३ ॥

ஸூதகாந்தஸ்து ஜாதஸ்ய ம்ருதௌ சிஷ்டாஹமிஷ்யதே ।
பிதுஸ்து த்வ்யஹம் அந்த்யாஹே தத் ப்ரபாதே த்ர்யஹம்
பவேத் ॥ 53 ॥

जनने क्षेत्रजादीनां तत्पित्रोस्त्र्यहमिष्यते ।
तज्ज्ञात्योर्दिनमेवेत्थमुपेतानां मृतौ न चेत् ॥ ५४ ॥

ஜநநே க்ஷேத்ரஜாதீநாம் தத்பித்ரோஸ்த்ர்யஹமிஷ்யதே ।
தத்ஜ்ஞாத்யோர்திநமேவேத்தம் உபேதாநாம் ம்ருதௌ
ந சேத் ॥ 54 ॥

पित्रोस्त्र्यहं तयोस्सद्यः त्र्यहं तेषां पितृक्षये ।
जाते च सोदके प्रेते त्र्यहं सद्यो व्रतादधः ॥ ५५ ॥

பித்ரோஸ்த்ர்யஹம் தயோஸ்ஸத்ய: த்ர்யஹம்
தேஷாம் பித்ருக்ஷயே ।
ஜாதே ச ஸோதகே ப்ரேதே த்ர்யஹம் ஸத்யோ வ்ரதாதத: ॥

यस्मिन् दिने रजो दृष्टं तदादि त्रिदिनं स्त्रियाः ।
अनेकपितृकावेकमातृकौ तु परस्परम् ॥ ५६ ॥

யஸ்மிந் திநே ரஜோ த்ருஷ்டம் ததாதி த்ரிதிநம் ஸ்த்ரியா: ।
அநேகபித்ருகாவேகமாத்ருகௌ து பரஸ்பரம் ॥ 56 ॥

जन्मन्यह्ना विशुद्धयेतां मरणे तु त्रिरात्रतः ।
स्वगृहे श्रोत्रिये प्रेते त्र्यहमश्रोत्रिये दिनम् ॥ ५७ ॥

ஜந்மந்யஹ்நா விசுத்யேதாம் மரணே து த்ரிராத்ரத: ।
ஸ்வக்ருஹே ச்ரோத்ரியே ப்ரேதே த்ர்யஹம்
அச்ரோத்ரியே திநம் ॥ 57 ॥

श्रोत्रिये तु मृते ग्रामे दिनमश्रोत्रिये न हि ।
बन्धुष्वहस्त्र्यहं पित्रोरूढा तत्तद्गृहे यदि ॥ ५८ ॥

ச்ரோத்ரியே து ம்ருதே க்ராமே திநம், அச்ரோத்ரியே ந ஹி ।
பந்துஷ்வஹ: த்ர்யஹம் பித்ரோ: ஊடா தத்தத்க்ருஹே ந ஹி

प्रसूतान्यगृहे सूता मृता वा तस्य नास्त्यघम् ।
परोक्षे पक्षिणी नो चेत् त्र्यहम् प्रेतान्नभोजने ॥ ५९ ॥

ப்ரஸூதாங்யக்ருஹே ஸூதா ம்ருதா வா தஸ்ய நாஸ்த்யகம் ।
பரோக்ஷே பக்ஷிணீ யோ வேத் த்ர்யஹம் ப்ரேதாங்க
போஜநே ॥

दशरात्रं मृतौ पुत्र्याः पित्रोश्चान्योन्यमित्यघम् ।
पराश्रितायाः भार्यायाः मृतौ पत्योस्त्रिरात्रकम् ॥६०॥

தசராத்ரம் ம்ருதௌ புத்ர்யா: பித்ரோச்சாங்யோந்யமித்யகம்।
பராச்ரிதாயா: பார்யாயா: ம்ருதௌ பத்யோஸ்த்ரிராத்ரகம் ॥

तत्पक्षयोर्दिनं तस्यास्त्र्यहं भर्त्रोश्च संस्थितौ ।
भागिनेये च दौहित्रे मृते तु त्र्यहमिष्यते ॥ ६१ ॥

தத்பக்ஷயோர்திநம் தஸ்யாஸ்த்ரயஹம் பர்த்ரோச்ச ஸம்ஸ்தி
தௌ ।
பாகிநேயே ச தௌஹித்ரே ம்ருதே து த்ர்யஹம்
இஷ்யதே ॥ 61 ॥

पक्षिण्युपनयात् पूर्वं वसिष्ठो मुनिरब्रवीत् ।
श्वश्रूश्वशुरस्वाचार्य तत्पत्नीतत्सुतर्त्विजाम् ॥ ६२ ॥

பக்ஷிண்யுபநயாத் பூர்வம் வஸிஷ்டோ முநிரப்ரவீத் ।
ச்வச்ருச்வசுரஸ்வாசார்ய தத்பத்நீதத் ஸுதர்த்விஜாம் ॥62॥

याज्यान्तेवासिनोर्नाशे त्र्यहमित्याह गौतमः ।
मातृष्वसृपितृभ्रातृमृतौ तत्प्रतियोगिनः ॥ ६३ ॥

யாஜ்யாந்தேவாஸிநோர்நாசே த்ர்யஹமித்யாஹ கௌதம: ।
மாத்ருஷ்வஸ்ரு பித்ருப்ராத்ரும்ருதௌ தத்ப்ரதி-
யோகிந: ॥ 63 ॥

पुंसस्त्र्यहं मातुलानीमातामह्योर्मृतौ तथा ।
मातृष्वसृसुतापुत्रौ पितृष्वसृसुतस्त्रियौ ॥ ६४ ॥

பும்ஸஸ்த்ர்யஹம் மாதுலாநீ மாதாமஹ்யோர்ம்ருதௌ ததா ।
மாத்ருஷ்வஸ்ருஸுதாபுத்ரௌ பித்ருஷ்வஸ்ருஸுத-
ஸ்த்ரியௌ ॥ 64 ॥

स्वसा पितृव्यपुत्री च स्वसृपुत्री पितृष्वसा ।
भ्रातृपुत्री च दौहित्री पौत्री तत्प्रतियोगिनौ ॥ ६५ ॥

ஸ்வஸா பித்ருவ்யபுத்ரீ ச ஸ்வஸ்ருபுத்ரீ பித்ருஷ்வஸா ।
ப்ராத்ருபுத்ரீ ச தௌஹித்ரீ பௌத்ரீ தத்ப்ரதி-
யோகிநௌ ॥ 65 ॥

स्त्रीपुंसौ च क्वचित् प्रेते पक्षिण्याशौचिनौ मिथः ।
भिन्नपित्रोः पितृभ्रातृस्वस्रपत्यानि तत्प्रजाः ॥ ६६ ॥

ஸ்த்ரீபும்ஸௌ ச க்வசித் ப்ரேதே பக்ஷிண்யா-
சௌசிநோ மித: ।
பிந்நபித்ரோ: பித்ருப்ராத்ருஸ்வஸ்ரபத்யாநி
தத்ப்ரஜா: ॥ 66 ॥

शुध्यन्त्यह्ना मिथश्शावे जनास्तत्प्रतियोगिनः ।
ऊर्ध्वमेवोपनीतेः स्यात् त्र्यहपक्षिण्यहर्विधिः ॥ ६७ ॥

சுத்யந்த்யஹ்நா மிதச்சாவே ஜநாஸ்தத்ப்ரதியோகிந: ।
ஊர்த்வமேவோபநீதே: ஸ்யாத் த்ர்யஹ-
பக்ஷிண்யஹர்விதி: ॥ 67 ॥

प्राक् सद्यश्शौचमुद्वाहः स्त्रीणामुपनयो मतः ।
बन्धौ स्नानं सगोत्रेऽहः ज्ञेयसंबन्धके मृते ॥ ६८ ॥

ப்ராக்ஸத்யச் சௌசம் உத்வாஹ: ஸ்த்ரீணாம் உபநயோ
மத: ।
பந்தௌ ஸ்நாநம் ஸகோத்ரேऽஹ: ஜ்ஞேயஸம்பந்தகே
ம்ருதே ॥ 68 ॥

सब्रह्मचारिण्येकाहं सहाध्यायिनि पक्षिणी ।
उपाध्यायसुहृत्स्यालभूभृत्सु च मृतेष्वहः ॥ ६९ ॥

ஸப்ரஹ்மசாரிண்யேகாஹம் ஸஹாத்யாயிநி பக்ஷிணீ ।
உபாத்யாயஸுஹ்ருத் ஸ்யால பூப்ருத்ஸு ச
ம்ருதேஷ்வஹ: ॥ 69 ॥

श्वश्रूश्वसुरतत्पुत्रयाज्याचार्यसुतर्त्विजाम् ।
उपाध्यायस्य सद्यस्स्यान्मृतौ तत्प्रतियोगिनाम् ।। ७०।।

ச்வச்ருச்வஸுரதத்புத்ரயாஜ்யாசார்யஸுதர்த்விஜாம் ।
உபாத்யாயஸ்ய ஸத்ய: ஸ்யாந் ம்ருதௌ தத்ப்ரதியோகிநாம்

राष्ट्रक्षोभे च दुर्भिक्षे व्याधावित्यादिकापदि ।
सद्यश्शौचं भवेदापन्निस्तरोपायकर्मसु ।। ७१ ।।

ராஷ்ட்ரக்ஷோபே ச துர்பிக்ஷே வ்யாதாவித்யாதிகாऽऽபதி ।
ஸத்யச்சௌசம் பவேதாபந்நிஸ்தரோபாயகர்மஸு ।। 71 ।।

गोविप्रस्त्रीकृते प्रेते राज्यार्थं वा हते युधि ।
शौचं चोर्ध्वक्रियास्सद्यो यद्यनिच्छास्त्यघं मृतौ ।। ७२ ।।

கோவிப்ரஸ்த்ரீக்ருதே ப்ரேதே ராஜ்யார்த்தம் வா ஹதே யுதி ।
சௌசம் சோர்த்வக்ரியாஸ்ஸத்யோ யத்யநிச்சாஸ்த்யகம்
ம்ருதௌ ।। 72 ।।

एकरात्रं भवेद् युद्धक्षतैः कालान्तरे मृते ।
अन्वक्षं शृङ्गिचोरान्त्यविद्युच्छस्त्रविषाग्निभिः ।।७३।।

ஏகராத்ரம் பவேத் யுத்தக்ஷதை: காலாந்தரே ம்ருதே ।
அந்வக்ஷம் ச்ருங்கிசோராந்த்ய வித்யுச்சஸ்த்ரவிஷாக்நிபி: ।।

[1]प्रायोऽनशनतोयाद्यैः मृते कामात् प्रवृत्तितः ।
प्रमादाद् दुर्मृतौ सद्यः क्रियाशौचे समाचरेत् ।। ७४ ।।

ப்ராயோऽநசநதோயாத்யை: ம்ருதே காமாத் ப்ரவ்ருத்தித: ।
ப்ரமாதாத் துர்ம்ருதௌ ஸத்ய: க்ரியாசௌசே ஸமாசரேத் ।।

वैधे प्रायादिमरणे त्र्यहं सद्यश्च तत्क्रियाः ।
षण्डपाषण्डपतितप्रव्रज्यावासिमोघजाः ।। ७५ ।।

வைதே ப்ராயாதிமரணே த்ர்யஹம் ஸத்யச்ச தத்க்ரியா: ।
ஷண்டபாஷண்டபதித ப்ரவ்ரஜ்யாவாஸி மோகஜா: । 75 ।।

---

1. आन्ध्रलिपिकोशानुसारेण अयं पाठः । अन्यत्र तु 'प्रायानशन' इति दृश्यते ।।

स्वैरिण्यनाश्रमिस्तेन गर्भभर्त्रात्मघातिनः ।
नाशौचार्हास्तदा तूर्ष्णीं दाह्याः पश्चात्तु मन्त्रतः ।।७६

ஸ்வைரிண்யநாச்ரமிஸ்தேந கர்பபர்த்ராத்மகாதிந: ।
நாசௌசார்ஹாஸ்தகா தூஷ்ணீம் தாஹ்யா: பச்சாத்து
மந்த்ரத: ॥ 76 ॥

दुर्मृतौ वत्सरान्ते वा षण्मासान्ते त्र्यहात् क्रियाः ।
त्र्यहं चाघमिहावश्यं नारायणबलिर्भवेत् ।। ७७ ।।

துர்ம்ருதௌ வத்ஸராந்தே வா ஷண்மாஸாந்தே த்ர்யஹாத்
க்ரியா: ।
த்ர்யஹம் சாகமிஹாவச்யம் நாராயணபலிர் பவேத் ॥ 77 ॥

आद्योराश्रमिणोर्नाशे वर्णोक्तं त्वन्ययोर्मृतौ ।
सद्यश्शौचं गृहिण्येवं सद्योऽन्येषु सदा मिथः ।। ७८ ।।

ஆத்யோராச்ரமிணோர்நாசே வர்ணோக்தம் த்வந்யயோர்ம்ரு
தௌ ।
ஸத்ய: சௌசம் க்ருஹிண்யேவம் ஸத்யோऽந்யேஷு
ஸதா மித: ॥ 78 ॥

कृच्छ्रदेवोत्सवश्राद्धदानहोमतपोऽध्वरे ।
प्रारब्धे तत्प्रवृत्तानां सद्यश्शौचमघागमे ।। ७९ ।।

க்ருச்ச்ரதேவோத்ஸவச்ராத்ததாநஹோமதபோऽத்வரே ।
ப்ராரப்தே தத்ப்ரவ்ருத்தாநாம் ஸத்ய: சௌசம்
அகாகமே ॥ 79 ॥

श्राद्धोत्सवादौ भुक्तयन्तः पाकादौ वाघसंभवे ।
परैर्देयं च भोक्तव्यं न दोष इति निश्चयः ।। ८० ।।

ச்ராத்தோத்ஸவாதௌ புக்த்யந்த: பாகாதௌ வாகஸம்பவே।
பரைர்தேயம் ச போக்தவ்யம் ந தோஷ இதி நிச்சய: ॥ 80 ॥

यज्ञोत्सवादौ सर्वत्र प्राक् प्रक्लृप्तेषु नास्त्यघम् ।
दानादौ ग्रहणे सद्यः पुत्रजन्मनि(चापदि) चावृति ।।

யஜ்ஞோத்ஸவாதௌ ஸர்வத்ர ப்ராக் ப்ரக்லுப்தேஷு
நாஸ்த்யகம் ।
தாநாதௌ க்ரஹணே ஸத்ய: புத்ரஜந்மநி (சாபதி) சாவ்ருதி ॥

निष्कृतौ तीर्थयात्रायां वेदपारायणे व्रते ।
नामकर्मादिसंस्कारे प्रारब्धे सद्य इष्यते ॥ ८२ ॥

நிஷ்க்ருதௌ தீர்த்தயாத்ராயாம் வேதபாராயணே வ்ரதே ।
நாமகர்மாதிஸம்ஸ்காரே ப்ராரப்தே ஸத்ய இஷ்யதே ॥ 82 ॥

दासीदासनृपामात्यकारवः शिल्पिनो भिषक् ।
स्वस्वकृत्ये सदा शुद्धाः शुद्धा नैवान्यकर्मसु ॥ ८३ ॥

தாஸீதாஸந்ருபாமாத்யகாரவ: சில்பிநோ பிஷக் ।
ஸ்வஸ்வக்ருத்யே ஸதா சுத்தா: சுத்தா நைவாந்யகர்மஸு ॥

न विशेद्देवतागारं न कुर्याद्वन्दनाद्यघी ।
दशाहं सोदकज्ञात्योः त्रिरात्रं योनिबन्धुषु ॥ ८४ ॥

ந விசேத்தேவதாகாரம் ந குர்யாத் வந்தநாத்யகீ ।
தசாஹம் ஸோதகஜ்ஞாத்யோ: த்ரிராத்ரம் யோநிபந்துஷு ॥

विजातिषु शवोक्तं स्यात् प्रेतनिर्हरणे कृते ।
यः प्रमीतम् अलङ्कुर्याद् वहेद् वा प्रवहेद् द्विजम्॥८५॥

விஜாதிஷு சவோக்தம் ஸ்யாத் ப்ரேதநிர்ஹரணே க்ருதே ।
ய: ப்ரமீதம் அலங்குர்யாத் வஹேத் வா ப்ரதஹேத் த்விஜம் ॥

स शुध्यत्येककालेन कालशेषं बहिर्वसन् ।
ग्रामे वसन् दिनाच्छुध्येत् त्र्यहात् प्रेतगृहे वसन् ॥ ८६

ஸ சுத்யத்யேககாலேந காலசேஷம் பஹிர்வஸந் ।
க்ராமே வஸந் திநாத் சுத்யேத் த்ரயஹாத் ப்ரேதக்ருஹே
வஸந் ॥ 86 ॥

निर्हृत्य यो मृतान्नं च भुङ्क्ते स तु दशाहतः ।
यतीन्द्रानाथनिर्हारे सद्यश्शुद्धिर्महत् फलम् ॥ ८७ ॥

நிர்ஹ்ருத்ய யோ ம்ருதாந்நம் ச புங்க்தே ஸ து தசாஹத: ।
யதீந்த்ராநாத நிர்ஹாரே ஸத்யச்சுத்திர்மஹத் பலம் ॥ 87 ॥

दृष्टार्थं प्रेतनिर्हारे ज्ञातिभ्यो द्विगुणं त्वघम् ।
विजातीनां सजातेस्तु जात्युक्तमिति गौतमः ॥ ८८ ॥

த்ருஷ்டார்த்தம் ப்ரேதநிர்ஹாரே ஜ்ஞாதிப்யோ த்விகுணம் த்வகம் ।
விஜாதீநாம் ஸஜாதேஸ்து ஜாத்யுக்தமிதி கௌதம: ॥ 88 ॥

शवानुगमने रोदे कर्मण्यो नहि तद्दिने ।
प्रेतकृत्ये तु तत्कालमशुद्धोऽथाप्लुतश्शुचिः ॥ ८९ ॥

சவாநுகமநே ரோதே கர்மண்யோ நஹி தத்திநே ।
ப்ரேதக்ருத்யே து தத்காலம் அசுத்தோऽதாப்லுத: சுசி: ॥ 89 ॥

सत्याशौचेऽन्नपानादौ दशाहमशुचिर्व्रती ।
स्नानाग्निस्पर्शनाज्याशपुनस्स्नानासुसंयमैः ॥ ९० ॥

ஸத்யாசௌசேऽந்நபாநாதௌ தசாஹம் அசுசிர்வ்ரதீ ।
ஸ்நாநாக்நிஸ்பர்சநாஜ்யாச புநஸ்ஸ்நாநாஸுஸம்யமை: ॥90॥

द्विजातयो विशुद्धयन्ति सजातीयशवानुगाः ।
त्र्यहं शूद्रानुगे विप्रे द्व्यहं विड्भूपयोस्ततः ॥ ९१ ॥

த்விஜாதயோ விசுத்யந்தி ஸஜாதீயசவாநுகா: ।
த்ர்யஹம் சூத்ராநுகே விப்ரே த்வ்யஹம் விட்பூபயோஸ் தத: ॥ 91 ॥

नदीस्नानं च गायत्र्याः सहस्रं साष्टकं जपः ।
द्विजप्रेतानुगः शूद्रः शुद्धयेत् स्नानेन विण्नृपौ ॥ ९२ ॥

நதீஸ்நாநம் ச காயத்ர்யா: ஸஹஸ்ரம் ஸாஷ்டகம் ஜப: ।
த்விஜப்ரேதாநுக: சூத்ர: சுத்யேத் ஸ்நாநேந விண்ந்ரு பௌ ॥ 92 ॥

स्वाग्रयप्रेतानुगौ स्नानवह्निस्पर्शाज्यपानतः ।
ब्राह्मणस्य तु विड्भूपप्रेतानुगमने सति ॥ ९३ ॥

ஸ்வாக்ர்யப்ரேதாநுகெள ஸ்நாநவஹ்நிஸ்பர்சாஜ்யபாநத: ।
ப்ராஹ்மணஸ்ய து விட்பூபப்ரேதாநுகமநே ஸதி ॥ 93 ॥

**पक्षिण्यहर्नदीस्नानं गायत्र्यष्टशतं जपः ।**
**शूद्रप्रेतानुगे शूद्रे शवस्पृश्यहरन्यथा ॥ ९४ ॥**

பக்ஷிண்யஹர்நதீஸ்நாநம் காயத்ர்யஷ்டசதம் ஜப: ।
சூத்ரப்ரேதாநுகே சூத்ரே சவஸ்ப்ருச்யஹரந்யதா ॥ 94 ॥

**एककालस्तथा रोदे स्नानमेवास्थ्नि संचिते ।**
**स्नानं सवर्णरोदेऽस्थ्नि संचिते नृपवैश्ययोः ॥ ९५ ॥**

ஏககாலஸ்ததா ரோதே ஸ்நாநமேவாஸ்த்நி ஸஞ்சிதே ।
ஸ்நாநம் ஸவர்ணரோதேऽஸ்த்நி ஸஞ்சிதே ந்ருப
வைச்யயோ: ॥ 95 ॥

**असंचिते सचेलं तद् विप्रस्याचमनाप्लवौ ।**
**निकृष्टेष्वाप्लवाचामौ वर्णाग्र्येषु दिनाप्लवौ ॥ ९६ ॥**

அஸஞ்சிதே ஸசேலம் தத் விப்ரஸ்யாசமநாப்லவெள ।
நிக்ருஷ்டேஷ்வாப்லவாசாமெள வர்ணாக்ர்யேஷு திநா-
ப்லவெள ॥ 96 ॥

**प्राक् पश्चादस्थिचयनादातुरव्यञ्जने मिथः ।**
**अकृतेऽस्थिचये शूद्रादातुरव्यञ्जने कृते ॥ ९७ ॥**

ப்ராக் பச்சாதஸ்திசயநாத் ஆதுரவ்யஞ்ஜநே மித: ।
அக்ருதேऽஸ்திசயே சூத்ராத் ஆதுரவ்யஞ்ஜநே க்ருதே ॥ 97 ॥

**द्व्यहं नृपे त्र्यहं विप्रे दिनं सर्वेषु संचिते ।**
**स्पृष्टे मर्त्यास्थ्नि तु स्निग्धे त्रिरात्रं नीरसे दिनम् ॥**

த்வ்யஹம் ந்ருபே த்ர்யஹம் விப்ரே திநம் ஸர்வேஷு
ஸஞ்சிதே ।
ஸ்ப்ருஷ்டே மர்த்யாஸ்த்நி து ஸ்நிக்தே த்ரிராத்ரம் நீரஸே
திநம் ॥ 98 ॥

अमत्या त्वाप्लवाचामौ स्नानं स्निग्धेऽस्त्यभक्ष्यजे ।
गुर्वादौ सोदके स्रावे मातृबन्धौ वयस्यघम् ॥ ९९ ॥

அமத்யா த்வாப்லவாசாமௌ ஸ்நாநம்
ஸ்நிக்தே஽ஸ்த்ந்யபக்ஷ்யஜே ।
குர்வாதௌ ஸோதகே ஸ்ராவே மாத்ருபந்தௌ வயஸ்யகம் ॥

सर्ववर्णसमं हीति विज्ञानेश्वरघोषितम् ।
स्मृतिद्वैधे परोक्षेऽल्पं प्रत्यक्षे गुर्विति स्थितिः ॥ १०० ॥

ஸர்வவர்ணஸமம் ஹீதி விஜ்ஞாநேச்வரகோஷிதம் ।
ஸ்ம்ருதித்வைதே பரோக்ஷேऽல்பம் ப்ரத்யக்ஷே குர்விதி
ஸ்திதி: ॥

यथा हि योनिसंबन्धेष्वहर्विधिरसंनिधौ ।
याज्यादौ श्वशुरादौ च शिष्यादौ पक्षिणीविधिः ॥१०१

யதா ஹி யோநிஸம்பந்தேஷ்வஹர்விதிரஸந்நிதௌ ।
யாஜ்யாதௌ ச்வசுராதௌ ச சிஷ்யாதௌ பக்ஷிணீவிதி: ॥

अघान्ते सङ्गवे स्नात्वा विप्रः स्पृष्ट्वाम्बु शुद्ध्यति ।
नृपादिर्वाहनादीनि नान्यथेत्यब्रवीन्मनुः ॥ १०२ ॥

அகாந்தே ஸங்கவே ஸ்நாத்வா விப்ர: ஸ்ப்ருஷ்ட்வாம்பு
சுத்யதி ।
ந்ருபாதிர்வாஹநாதீநி நாந்யதேத்யப்ரவீந்மநு: ॥ 102 ॥

एकत्र सुखबोधार्थं सुसमीक्ष्य बहुस्मृतीः ।
कृतोऽघनिर्णयः स्पष्टं गृह्यतां तद्बुभुत्सुभिः ॥ १०३ ॥

ஏகத்ர ஸுகபோதார்த்தம் ஸுஸமீக்ஷ்ய பஹுஸ்ம்ருதீ: ।
க்ருதோऽகநிர்ணய: ஸ்பஷ்டம் க்ருஹ்யதாம் தத்புபுத்ஸுபி: ॥

हारीतो वेंकटेशार्यः श्रुतिस्मृतिविचक्षणः ।
व्यक्तं श्लोकशतेनेत्थम् अकरोदघनिर्णयम् ॥ १०४ ॥

ஹாரீதோ வேங்கடேசார்ய: ச்ருதிஸ்ம்ருதிவிசக்ஷண: ।
வ்யக்தம் ச்லோகசதேநேத்தம் அகரோதகநிர்ணயம் ॥

॥ சுபம் ॥

श्री:

श्रीमते श्रीलक्ष्मीनृसिंहदिव्यपादुकासेवक श्रीवणशठकोप-
श्रीश्रीरङ्गशठकोपयतीन्द्रमहादेशिकाय नमः

श्रीरङ्गशठजिद्योगिचरणाब्जमहर्निशम् ।
ध्यायन्नाशौचशतकविवृतिं करवाण्यहम् ॥

# ॥ आशौचशतकम् ॥

**सुरासुरशिरोरत्नं ब्रह्मरुद्रादिसेवितम् ।**
**प्रणम्य पुण्डरीकाक्षं वक्ष्याम्याशौचनिर्णयम् ॥ १ ॥**

(வ்யா) தேவர்கள் அஸுரர்கள் எல்லோரைக் காட்டிலும் மிகவும் சிறந்தவனாய், ப்ரஹ்மா, ருத்ரன் முதலிய தேவர்களால் ஸேவிக்கப்பட்டவனாய், தாமரைப் பூப்போன்ற திருக்கண்களை உடையவனான ஸ்ரீமந்நாராயணனை மனோவாக்காயங்களால் நமஸ்கரித்து 'ஆசௌசநிர்ணயம்' என்னும் க்ரந்தத்தின் மூலமாய் ஆசௌசத்தின் முடிவைச் சொல்லுகிறேன். (1)

### 1. ஆசௌசம் என்றால் என்ன?

**निमित्तं पिण्डदानादेः पुरुषस्थमशुद्धिकृत् ।**
**कालस्नानापनोद्यं यत् तदाशौचमितीर्यते ॥ २ ॥**

(வ்யா) 'ஆசௌசம்' என்றால் என்ன? என்பது விளக்கப்படுகிறது. முக்ய கர்த்தாவான புத்ரன் செய்யும் தஹனம் முதல் ஸபிண்டீகரணம் வரையிலான ப்ரேதகார்யத்திற்குக் காரணமாயும், ஸபிண்டன், ஸமானோதகன் இவர்கள் தர்ப்பணம் செய்வதற்குக் காரணமாயும், பந்துக்

களின் ஸ்நாநமாத்ரத்திற்குக் காரணமாயும், மனிதனிடமும் அவனுடைய வஸ்துக்களிடமும் உள்ளதாயும், ஜபஹோமா-த்யயனாதிகர்மங்களில் அநர்ஹதையை உண்டுபண்ணக் கூடியதுமான ஒரு அசுத்தி தான் 'ஆசௌசம்' எனப்படும். இது தெரிந்தால் தான் கர்மாநர்ஹதையை உண்டுபண்ணும். தெரியாதவரை கர்மாவுக்கு அர்ஹதை உண்டு. இவற்றில் சில காலத்தினால் மட்டும் போகக் கூடியவை. சில ஸ்நாந மாத்ரத்தினால் போகக் கூடியவை. வேறு சில காலம் ஸ்நாநம் இரண்டினாலும் சேர்ந்து போகக் கூடியவை. இங்குக் காலமாவது - பக்ஷிணீ (90 நாழிகை), ஒரு நாள், மூன்று நாட்கள், 10 நாட்கள் முதலியவை. காலத்தினால் மட்டும் போகக்கூடியவை - சவம் க்ராமத்திலிருக்கும்போது அந்த க்ராமத்தின் அசுத்தியும், தகப்பனார் தாயார் தவிர மற்ற ஜ்ஞாதிகளுக்கு ப்ரஸவநிமித்தமான தீட்டும். அந்தக் காலத்திற்குப் பிறகு இது கிடையாது. ஸ்நாநத்தினால் மட்டும் போகக் கூடியது—தூர பந்துக்களின் மரண நிமித்த மான தீட்டும், 'ஸத்யச் சௌசம்' என்று சொல்லப்பட்டதும், காலம் ஸ்நாநம் இரண்டினாலும் போகக் கூடியது - ஸபிண்-டன், ஸமானோதகன், ஸகோத்ரன், மாத்ருவர்க்கம் இவர்க ளின் மரணாசௌசமும், ஸம்பர்க்காசௌசமும் (சேர்க்கையி னால் உண்டான தீட்டு). (2)

2. ஆசௌசத்தில் செய்யத் தக்கவையும் தகாதவையும்

शावे च सूतकेऽघाख्ये कर्मणां त्याग इष्यते ।
द्रव्याण्यपि प्रदुष्यन्ति स्वाध्यायश्च निषिध्यते ।। ३ ।।

सान्ध्यं कर्माग्निहोत्रं च प्रेतकार्याणि चाप्लुतः ।
कुर्यादन्येन होमं तु कारयेन्नान्यदाचरेत् ।। ४ ।।

न देयं न प्रतिग्राह्यमघे देयं सदापदि ।
ग्राह्यं परैश्च तत्रामं तदहर्मात्रवृत्तये ।। ५ ।।

दधि क्षीरं घृतं शाकं पट्टु पुष्पं तिलौषधे ।
काष्ठं मूलफले मांसं मधु कूपाम्बु चाजिनम् ।। ६ ।।

पण्यान्यघेऽपि गृह्णीयात् स्वयं तु स्वाम्यनुज्ञया ।
भक्ष्यजातं तथा पक्वमपक्वं तण्डुलादिकम् ।। ७ ।।

अन्नसत्त्वरतस्यैव ग्राह्यमित्यङ्गिरा मुनिः ।
पुण्यत्वात् पुत्रजन्माहे देयं ग्राह्यं तथा परैः ।। ८ ।।

(வ்யா) ஸூதகம் ப்ரஸவாசௌசம், சாவம் மரணு சௌசம். இந்த ஆசௌசங்களில் வைதிக கர்மங்களைச் செய்யக் கூடாது. அக்காலங்களில் அவனுடைய த்ரவ்யங்களுக்கும் அசுத்தி உண்டு. வேதாத்யயனம், ஜபம், ஹோமம், பகவதாராதனம், பித்ருகார்யமான தர்ப்பணம், ச்ராத்தம் முதலியவைகளைச் செய்யக் கூடாதென்று கூறப்படுகிறது. பகவான் ஸ்ரீமந்நாராயணனைத் தவிர மற்றைய தேவதைகளின் நாமங்களைச் சொல்லக் கூடாது. மனதிற்கு அசுத்தி கிடையாது. ஆகையால் மனதினுல் த்யானம் செய்வதில் தவறில்லை. ப்ரஸவித்தவள், ரஜஸ்வலை, சவத்தைத் தொட்டவன் இவர்கள் மனதாலும் அந்த நாமங்களை நினைப்பது கூடாது. நாராயணனுடைய நாமங்களை அசுத்தனுயிருக்கும் போதும் கீர்த்தனம் செய்யலாம். ஸந்த்யாவந்தனம், அக்னிஹோத்ரத்தில் காலையிலும் மாலையிலும் செய்யும் ஹோமம், ப்ரேதக்ருத்யங்கள் இவைகளைத் தீட்டிலும் ஸ்நாநம் செய்து செய்யலாம். ஸந்த்யாவந்தனம் மனதினுலேயே ஸ்மரித்து ஜபம் முதலியவைகளைச் செய்ய வேண்டும். ப்ராணுயாமத்தையும் அர்க்யதானமந்த்ரத்தையும் மட்டும் வாயால் உச்சரிக்கலாம். ஔபாஸனஹோமத்தைத் திட்டு வருவதற்கு முன் ஹோமத்திற்காக ஸங்கல்ப்பிக்கப் பட்ட தண்டுலம் (அரிசி) முதலியவைபினுலோ, அதில்லாவிடில் வேறு ஒரு ச்ரோத்ரியருடைய க்ருஹத்திலிருந்து கொண்டு வந்த அரிசியினுலோ தீட்டில்லாத வேறொருவரைக் கொண்டு செய்விக்கவேண்டும். தான் செய்யக் கூடாது. இவைகள்

தவிர வைச்வதேவம் முதலிய ச்ரௌத-ஸ்மார்த்த க்ருஹ்ய கர்மாக்களைச் செய்வதோ செய்விப்பதோ கூடாது. வேறொருவன் கிடைக்காத போது ஸ்நானம் செய்து ஈர வேஷ்டியோடு அக்னிஹோத்ரஹோமத்தைத் தானே செய்யலாம். அந்த ஸமயத்தில் மாத்ரம் அவனுக்கு சுத்தி உண்டு. மற்ற ஸமயத்தில் சுத்தி கிடையாது. தீட்டில் கொடுக்கவும் கூடாது. தீட்டில் தானம் வாங்குவதும் கூடாது. ஆனால் ப்ராணுபத், (உத்க்ராந்தி, தேசத்தில் குழப்பம், க்ஷாமம் முதலிய ஆபத்) காலத்தில் தீட்டுக்காரர்களும் தானம் பண்ணலாம். தீட்டில்லாதவர்களும் தீட்டுள்ளவர்களும் அன்றைய தின மாத்திரத்தின் ஜீவனத்திற்காகப்பச்சையான(சமையலாகாத) வஸ்துவை மாத்ரம் வாங்கிக் கொள்ளலாம். தயிர், பால், நெய், காய்கறிகள், உப்பு, புஷ்பம், எள்ளு, மருந்து, விறகு, கிழங்கு, பழம், மாம்ஸம், தேன், கிணற்றுநீர், மான்தோல், கடையில் விற்கப்படும் பொருள்கள் இவைகளை யஜமானனுடைய அனுமதியின் பேரில் நேராகக் கையிலிருந்து வாங்காமல் தரையிலிருந்து தானே எடுத்துக் கொள்ளலாம். பக்வமான பக்ஷ்யத்ரவ்யங்களும், பக்வமல்லாத அரிசி முதலியவைகளும் நித்யம்அன்னதானம்பண்ணுகிறவனிடமிருந்து வாங்கிக் 'கொள்ளலாம். ஆனால், பக்வமான அன்னத்தை வாங்கிக் கொள்ளக் கூடாது. புத்ரஜன்மதினம் புண்ய காலமாகையால் அன்று தானம் பண்ணலாம். மற்றவர்களும் (தீட்டில்லாதவர்களும், அந்தக் குலத்தவர்களும்) தான்யம், ஹிரண்யம் முதலிய அந்த தானத்தை வாங்கிக் கொள்ளலாம். (3-8)

### 3. தீட்டுள்ளவனுடைய அன்னத்தைப் புஜித்தால்?

**अघे भोक्तुधियाशौचं शिष्टाहं त्वैन्दवं ततः ।**

**मोहात् तावदघं यावद् भुक्तं जीर्णं पतत्यधः ।। ९ ।।**

**आपत्स्वहरघे भोक्तुरिवं ज्ञातेनं वोधकृत् ।**

(வ்யா) ஆசௌசம் உள்ளவனுடைய அன்னத்தை புத்திபூர்வமாக போஜனம் செய்பவனுக்கு அன்னமிட்டவ

னுக்கு ஆசௌசம் எத்தனை நாள் உள்ளதோ அத்தனை நாள் வரை ஆசௌசம் உண்டு. பின்பு இதற்கு ப்ராயச்சித்தமாக சாந்த்ராயணத்தை அநுஷ்டிக்க வேண்டும். இவ்விருவர்களுள் யாருக்காவது தீட்டு என்று தெரிந்திருந்தால் தான் இந்த தோஷம். இருவருக்கும் தெரியாமலிருந்தால் தோஷம் இல்லை. தெரியாமல்போஜனம் செய்தால்அன்னம் ஜீர்ணித்து வெளியேறும் வரை (7நாட்கள் வரை) ஆசௌசம் உண்டு. அல்லது மூன்று நாட்கள் உபவாஸமிருந்தால் நான்காவது நாள் சுத்தி உண்டு. ரோகத்தினுல் அசக்தி, துர்பிக்ஷம் முதலிய ஆபத்காலத்தில் புத்திபூர்வமாக ஆசௌசியின் அன்னத்தை போஜனம் செய்தால் ஒரு நாள் ஆசௌசம் உண்டு. ஜ்ஞாதிகளுக்கு ஆசௌசியின் அன்னபோஜனத்தில் தோஷமில்லை. (9½)

4. பர்த்தாவுக்கு உண்டான தீட்டு பத்னிக்கும் உண்டு.

भर्तुर्यद्यदघं तत्तत् पत्न्याः स्यान्नास्य पत्न्यघम् ॥१०॥

(வ்யா) பர்த்தாவிற்கு ஏற்படும் ஆசௌசமெல்லாம் (மாதாமஹன், மாதாமஹி, அம்மான், ஸஹோதரீ, மருமான், தாயாருடைய ஸஹோதரீ, பிதாவினுடைய ஸஹோதரீ' முதலிய, மாத்ரு வர்க்கத்தின் அல்லது பித்ருவர்க்கத்தின் மரணமூலமாயோ வரும் ஆசௌசங்கள்)பத்னிக்கும் உண்டு. பத்னியினுடைய மாதாமஹாதி பிறந்தகத்தைச் சேர்ந்தவர்களின் மரணம் மூலமாக வந்த ஆசௌசம் பர்த்தாவுக்குக் கிடையாது. . (10)

5. ஸம்பர்க்காசௌசம்.

अघिसंपर्कतोऽशौचं भवेत् तद्दिनसंख्यकम् ।
न तद्द्रव्यक्रियास्त्रीणां सांपर्किकमघं भवेत् ॥ ११ ॥

(வ்யா) ஆசௌசம் உள்ளவனுடைய சேர்க்கையினுல் உண்டான ஆசௌசம் 'ஸம்பர்க்காசௌசம்' எனப்படும். ஸம்பர்க்கம் (சேர்க்கை) ஆவது - ப்ரேதகார்யத்தைச் சொல்

லிச் செய்து வைத்தல், முக்ய கர்த்தாவிடமிருந்து புல் வாங்கி ப்ரதிநிதியாகப் பண்ணுதல் அல்லது தயையினால் அநாதவிஷயத்தில் அப்படிப்பட்ட கார்யம் செய்தல், தீட்டுக் காரர்களுடன் நிரந்தரமான ஸஹவாஸம், ஒரே பங்க்தியில் போஜனம் செய்தல், அவனுடைய த்ரவ்யத்தை வாங்கிக் கொள்ளுதல் இவை. இவை என்றைக்கு ஏற்படுகின்றனவோ அன்றைய தினம் ஷி ஸம்பர்க்கம் உள்ளவனுக்கும் ஆசௌசம் உண்டு. இந்த ஸம்பர்க்காசௌசம், ஸம்பர்க்கம் உள்ளவனுடைய த்ரவ்யத்திற்கோ, த்ரவ்யத்தினால் செய்யப்படும் க்ரியைகளுக்கோ அவனுடைய பத்னிக்கோ கிடையாது. (11)

## 6. அதிக்ராந்தாசௌசம், க்ரியா - த்ரவ்யங்களுக்கு இல்லை—

**तथा नैव क्रियाद्रव्येष्वतीतं त्रिदिनाद्यघम् ।**

(வ்யா) 'त्रिरात्रं त्रिषु मासेषु पक्षिण्येव ततस्त्रिषु' என்கிறபடி ஜ்ஞாதிமரணவிஷயத்தில் பத்து நாட்களுக்கு மேல் மூன்று மாதங்களுக்குள் கேட்டால் மூன்று நாட்கள் ஆசௌசம் என்றும், அதற்குமேல் மூன்று மாதங்களில் கேட்டால் பக்ஷிண்யாசௌசம் (90 நாழிகை தீட்டு) என்றும் சொல்லப் போகிற அதிக்ராந்தாசௌசமும் (காலம் கடந்த தீட்டு) அவனுடைய த்ரவ்யத்திற்கும் அதனால் செய்யக் கூடிய க்ரியைகளுக்கும் கிடையாது. அவனுடைய பத்னிக்கு மாத்ரம் ஷி அதிக்ராந்தாசௌசம் உண்டு. (11½)

## 7. ஜீவச்ச்ராத்த விஷயத்தில் ஆசௌசம்

**जीवच्छ्राद्धे भवेत् स्वस्य दशाहं नेतरेष्वघम् ॥ १२ ॥**

(வ்யா) ஆபத்தை அடைந்த ஸ்த்ரீயோ புருஷனோ தான் ஜீவித்திருக்கும்போதே தனக்கு ச்ராத்தம் செய்து கொள்ளலாமென்று விதிக்கப்பட்ட ஜீவச்ச்ராத்தத்தில் அந்த கர்த்தாவுக்கு மாத்ரம் பத்து நாட்கள் ஆசௌசம் உண்டு. ஜ்ஞாதிக்கு இந்த ஆசௌசம் கிடையாது. (12)

### 8. ஆசௌசம் உள்ளவனை ஸ்பர்சித்தால் செய்யவேண்டியவை.

**आन्तं शावेऽङ्गसंस्पर्शं त्यजेत् सूतौ चतुर्दिनम् ।**
**स्पर्शेऽनघस्य तु स्नानं कृच्छ्रोऽन्याशौचिनः स्मृतः ॥१३॥**

(வ்யா) மரணாசௌசம் உள்ளவனைத் தீட்டுள்ளவரையிலும், ப்ரஸவாசௌசம் உள்ளவனை நான்கு நாட்களும் தொடக்கூடாது. (புத்திபூர்வமாகவோ தெரியாமலோ) அப்படித் தொட்டால் தீட்டில்லாதவர்களாயின் ஸ்நாநம் செய்யவேண்டும். வேறு ஆசௌசம் உள்ளவன் (ஜ்ஞாதி தவிர மற்றவன்) தீண்டினால் நான்கு நாட்களுக்கு மேல் தீண்டினாலும் ஸ்நாநம் செய்து ப்ராயச்சித்தமாக க்ருச்ச்ரமும் செய்து கொள்ளவேண்டும். ஆசௌசம் உள்ளவன் வேறு ஆசௌசம் உள்ளவனைத் தெரியாமல் தீண்டினால் ப்ராஜாபத்யக்ருச்ச்ரமும், புத்திபூர்வமாகத் தீண்டினால் ஸாந்தபநக்ருச்ச்ரமும் ப்ராயச்சித்தமாகும். ஆசௌசம் உள்ளவனை மற்றவர்கள் (ஆசௌசம் இல்லாதவர்கள்) தீண்டினால் ஸ்நாநம் பண்ணவேணுமென்றும், அவர்களின் தீர்த்தத்தைப் பானம் பண்ணினால் பஞ்சகவ்யம் சாப்பிடவேண்டுமென்றும், அன்னத்தை புஜித்தால் மூன்று நாட்கள் உபவாஸமிருக்க வேணுமென்றும் வசநங்களில் கூறப்பட்டுள்ளது. (13)

### 9. க்ராமத்திற்குள் சவம் இருந்தால் தவிர்க்க வேண்டியவையும் அவற்றுக்கு விதி விலக்கும்.

**अन्तःशवोऽशुचिर्ग्रामस्तत्र होमादि नाचरेत् ।**
**वीथ्यन्तरे सदा कुर्यादेकादशधनुष्परे ॥ १४ ॥**

(வ்யா) ஒரு க்ராமத்திற்குள் சவமிருந்தால் அந்த க்ராமத்திற்கு அசுத்தி உண்டு அப்போது அந்த க்ராமத்தில் ஹோமம், வேதாத்யயனம், ஜபம், ஆராதனம், போஜனம் இவைகளைச் செய்யக்கூடாது. பதினொரு விற்கடைதூரமிருந்து வேறு வீதியானால் அதில் இவைகளைச் செய்யலாம். (14)

**ग्रामे चतुश्शतब्रह्मयुक्तेऽप्यन्तश्शवे क्रियाः ।**
**कुर्यात् स्त्रीवृषलानाथबालार्तौ चेत्यथापरे ॥ १५ ॥**

(வ்யா) ஆனல் ஒரு க்ராமத்தில் நானூறு ப்ராஹ்மணர்கள் வஸிக்கும் பக்ஷத்தில் சவம் க்ராமத்திலிருந்தாலும் அந்த க்ராமத்தில் பதினெரு விற்கடை இடைவெளியிராமல் இருந்தாலும், வேறு வீதியிலோ, ஒரேவீதியிலும் நாற்சந்தி இடையிலிருந்தாலோ, நாராசத்தினுல் இடைவெளியிருந்தாலோ ஹோமம் முதலிய கர்மாக்களைச் செய்யலாம். முற்கூறிய தோஷமில்லை. இம்மாதிரியே, ஸ்த்ரீ, சூத்ரன், அநாதன், பாலன் இவர்களுடைய மரணவிஷயத்திலும் முற்கூறிய தோஷம் (சவம் க்ராமத்திலிருந்தால் அசுத்தி) இல்லை என்றும் மஹர்ஷிகள் சிலர் கூறுகிருர்கள். (15)

**पूजाविधौ मृतौ शेषं तन्त्रेणैव समापयेत् ।**
**कर्मान्तस्तु बहिर्ग्रामं प्रेतं नीत्वा तदाचरेत् ॥ १६ ॥**

(வ்யா) ஆராதனத்தின் நடுவில் க்ராமத்தில் மரணம் ஸம்பவித்தால் மீதி கார்யத்தை மந்த்ரமில்லாமல் தந்த்ரத்தினுலே சுருக்கமாக முடித்துவிடவேண்டும். ப்ரதிஷ்டை, சௌளம் முதலிய கர்மாக்களின் நடுவில் மரணம் ஏற்பட்டால், அதோடு ஷெ கர்மாவை நிறுத்திவிட்டு மீதியைச் சவம் வெளியே அப்புறப்படுத்தப்பட்ட பின்பு செய்யவேண்டும். தந்த்ரத்திறுல் செய்யக்கூடாது.

### 10. கந்யா–புருஷர்களுக்கு ஸாபிண்ட்யமும் அதில் ஆசௌசமும்.

**आत्रिपूरुषमेवाघं कन्यायाः मृतिजन्मनोः ।**
**आसप्तपूरुषं पुंसः सापिण्ड्यं च तथा द्वयोः ॥ १७ ॥**

(வ்யா) கன்யகையின் ஜனனமரணங்களில் மூன்று தலைமுறைவரை ஆசௌசம் உண்டு. புருஷனின் ஜனன மரணங்களில் ஏழுதலைமுறை வரை ஆசௌசம். கன்யகை

விஷயத்திலும் புருஷப்ரஜை விஷயத்திலும் ஸபிண்டனுயி ருத்தல் (ஒரு சரீர ஸம்பந்தம்) முறையே மூன்று தலைமுறை யும் ஏழுதலைமுறையுமாகும். அதாவது, ஸ்த்ரீப்ரஸவத்தில். கன்யகையுடன் சேர்ந்து மூன்று தலைமுறை - கன்யகையின் ஸஹோதரன், பிதா, பிதாவின் ப்ராதா, அவனுடைய பிள்ளை கள், பிதாமஹன் அவனுடைய ப்ராதா, இவர்களுக்கு ஜனனத் தில் ஆசௌசம் உண்டு. புருஷனுடைய ஜனனத்திலோ மரணத்திலோ ஏழுதலைமுறை - கூடஸ்தனிடமிருந்து ஜனித் தவன் வரை ஏழாகக்கணக்கிட்டு அந்த ஸந்ததியில் உள்ள வர்களுக்கு ஆசௌசமும் ஸாபிண்ட்யமும் (ஒருசரீராவயவ ஸம்பந்தம்) உண்டு. ஏழுதலைமுறை வரை 'ஸபிண்டர்கள்' என்றும், அதற்குமேல் ஏழுதலைமுறை வரை 'ஸமானோதகர் கள்' என்றும் வழங்கப்படுகிறது. (17)

**11. ஜனன - மரணங்களில் ப்ராஹ்மணன் முதலியவர் களுக்கு முறையே ஆசௌசம்.**

**अतः परं प्रवक्ष्यामि सपिण्डानामघं स्फुटम् ।**
**जन्महान्योस्तु वर्णानां दश षोडश विंशतिः ॥ १८ ॥**
**त्रिंशत्रिशाः क्रमेणाघमित्यनेकर्षिसंमतम् ।**

(வ்யா) இனி ஸபிண்டர்களுக்கு ஆசௌசம் சொல்லப் படுகிறது. பிராஹ்மணர்களுக்கு ஸபிண்டர்களுடைய ஜன னத்திலும் மரணத்திலும் பத்து தினங்களும், க்ஷத்திரியர் களுக்குப் பதினாறு நாட்களும், வைச்யர்களுக்கு இருபது நாட்களும், சூத்ரர்களுக்கு ஒரு மாஸமும் ஆசௌசம் என்பது அநேக ரிஷிகளுடைய ஸம்மதமாகும், (சிலர் இவற்றில் குறைவாகச் சொல்லியிருந்தாலும் பெரும்பாலரான மஹர்ஷி கள் முற்கூறியபடியே சொல்லியிருப்பதனுல் அதையே ஏற் றுக்கொள்ள வேண்டும் என்றபடி). (பிராஹ்மணர்களுக்குப் பத்து நாட்கள் ஆசௌசம் சொன்னது உபநயனமானவனு டைய மரணத்தைப் பற்றியது. உபநயனமாகாதவனுடைய மரண விஷயத்தில் பிதா, ப்ராதா, தவிர மற்ற ஸபிண்டர் களுக்கு ஆசௌசத்தில் விசேஷம் மேல் சொல்லப்படப் போகிறது.) (18½)

**मुख्यकर्तुरघं तावद्यावत् प्रेतत्वमोचनम् ॥ १९ ॥**
**पुत्राणामप्यघं तावन्मुख्यकर्तर्यपि स्थिते ।**

(வ்யா) பிதாவின் ஸம்ஸ்காரத்தில் முக்ய கர்த்தா வான ஜ்யேஷ்ட புத்ரனுக்கு ஸபிண்டீகரணம் வரை அசுத்தி உண்டு. முக்ய கர்த்தாவான ஜ்யேஷ்டன் கர்த்தா வாக இருக்கும்போது கநிஷ்டர்களான புத்ரர்களுக்கும் ஸபிண்டீகரணம் வரை இம்மாதிரியே அசுத்தி உண்டு. இங்கு முக்கிய கர்த்தாவுக்குப் பத்து நாட்களுக்கு மேலும் ஸபிண்டீகரணம் வரை அசுத்தி சொன்னது கர்மாக்களில் அநர்ஹதையைச் சொன்னபடி. ஸ்பர்சத்தைப் பற்றிய தன்று. 'இந்த ந்யாயத்தாலே "एकोद्दिष्टं नवश्राद्धं श्राद्धान्यपि च षोडश । एकेनैव तु कर्तव्यं संविभक्तधनेष्वपि ॥" என்று ஏககர்த்ருகங் களான ஏகோத்திஷ்ட நவச்ராத்த அநுமாஸிகங்களிலும் புத்ரர்கள் எல்லோருக்கும் நியமம் ஸித்தமென்று புத்ரர்களெல் லோருக்கும் வத்ஸராந்தம் தீக்ஷையும், ப்ரஹ்மசர்யமும் கண்டு கொள்வது' என்று த்ராவிடவ்யாக்யாநத்தில் உள்ளது. முக்ய கர்த்தா ஸபிண்டீகரணத்தைப் பண்ணுமல் சுப காரியங்களைச் செய்யக் கூடாது என்று சொல்லப்பட்டிருக் கிறபடியால் முக்ய கர்த்தா தவிர மற்ற ஜ்ஞாதிகள் ப்ரேத கார்யங்களைச் செய்யாதபோது பத்து நாட்களுக்கு மேல் சுப கர்மாவைச் செய்யலாமென்று ஏற்படுகிறது. புத்ரர்கள் தங்கள் பிதாவுக்கு ஸம்ஸ்காரத்தைச் செய்யாமல் தவற விட்டிருந்தாலும் ஜ்ஞாதிகளுக்குப்பத்து நாட்களுக்கு மேல் ஆசௌசம் இல்லை. அவர்கள் நித்யம் நைமித்திகம் முதலிய கர்மாக்களைச் செய்யலாம். ஸம்ஸ்காரம் முதலியவைகளைச் செய்தால் ஜ்ஞாதிகளுக்கும் பத்து நாட்களுக்கு மேலும் முற் கூறிய கர்மாநர்ஹதை உண்டு. புத்ரர்களுக்கும் தௌ ஹித்ரனுக்கும், அப்யுதயத்தில் மாத்ரு, பித்ரு, மாதாமஹ வர்க்கங்கள் உத்தேச்யங்களாகையால் அவர்களுக்கு ஷோடச கர் மாக்களை முடிக்காதவரை சுபகர்மாக்களில் ஸம்பந்தம் கூடாது. அவற்றை முடித்துவிட்டுத்தான் சுபகாரியங் களைச் செய்யவேண்டும்.

எவனுக்கு மாதா பிதாக்கள் மரணத்தை அடைந்தார்களோ? அவனுடைய தேஹம் அசுத்தமாகையால் வர்ஷம் முடிவு வரை, தேவபித்ருகாரியங்களை அவன் செய்யக் கூடாது. மேலும், ஸமாவர்த்தனம், மஹாதானம், உபநயநம், அக்னி ஆதானம் முதலிய அக்னி பூஜை இவைகளையும் செய்யக் கூடாது என்று சொல்லியிருப்பது வருஷத்தின் முடிவில் ஸபிண்டீகரணம் பண்ணுபவர் விஷயம். பன்னிரண்டாவது நாள் முதலிய காலங்களில் ஸபிண்டீகரணம் செய்தால் பின்பு இவைகளைச் செய்யலாம். (19½)

### 12. இதற்கு விதி விலக்கும் - விசேஷமும்.

**शिष्यश्च दासभृतकौ स्वसपिण्डात्ययादिके ।। २० ।।**
**गुरुस्वामिसमाशौचा यदि तत्कुलवासिनः ।**

(வ்யா) சிஷ்யன், குருகுலவாஸம் பண்ணுமவனுயிருந்தால் அவனுடைய ஜ்ஞாதியின் ஜனன - மரணங்களில், தான் வேறு ஜாதியாயிருந்தால் அவனுக்கு, குருவுக்கு ஸமானமான ஆசௌசம் உண்டு. தாஸனுக்கும் (விலையினுல் அடிமையானவனுக்கும்) ப்ருதகன் (சம்பளம் மாஸக் கணக்கில் ஏற்பாடு செய்து ஜீவிப்பவன்) இவனுக்கும் தங்கள் யஜமானனுடைய வீட்டில் வஸிப்பவனுக இருந்தால் தன் ஜ்ஞாதியின் ஜனனமரணங்களில் தன் ஜாதி வேருக இருந்தாலும் யஜமானனுக்கு ஸமானமான ஆசௌசமே உண்டு. குருகுல வாஸமோ, யஜமானனுடைய வீட்டில் வ்ாஸமோ இல்லாத இவர்களுக்குத் தங்களுடைய ஜாதிக்குத் தகுந்த ஆசௌசம் தான். (20½)

**मासार्धं वैष्णवे शूद्रे दासदास्योश्च शार्ङ्गिणः ।। २१ ।।**

(வ்யா) சக்ராங்கனம் பண்ணியிருக்கிற வைஷ்ணவ சூத்ரனுக்கும் கோயிலைச் சேர்ந்த தாஸதாஸிகளுக்கும் பதினைந்து நாட்கள் ஆசௌசம் முற்கூறிய விஷயத்தில் உண்டு. மற்றவர்களுக்கு உரிய ஆசௌசம் முன்பே கூறப் பட்டது. (21)

## 16. ஸ்ராவம் முதலியவற்றில் தாயாருக்கு ஆசௌசம்.

**त्र्यहं मासत्रये मातुर्गर्भस्रावे ततः परम् ।। २६ ।।**
**मासतुल्यान्यहान्यूर्ध्वं षण्मासात् सूतिकाविधिः ।**

(வ்யா) மூன்றுமாஸங்களுக்குள் 'கர்பஸ்ராவம்' ஏற்பட்டால் மாதாவுக்கு மூன்று நாட்கள் ஆசௌசம். அதற்கு மேல் ஆறு மாதம் வரை, ஸ்ராவபாதங்களில் மாதாவுக்கு மாஸத்திற்கு ஸமமான எண்ணிக்கையுள்ள தினங்கள்-4,5, 6 தினங்கள் ஆசௌசம் உண்டு. ஏழாவது மாதம் முதல் ப்ரஸவித்தவளுக்கு என்ன முறையோ அந்த ரீதியில் ஆசௌசம் உண்டு. (26½)

## 17. ஸ்த்ரீ-புருஷப்ரஸவத்தில் தாயாருக்கும் ஜ்ஞாதிக்கும் ஆசௌசம்.

**चत्वारिंशद्दिनानि स्युर्जनन्याः स्त्रीप्रसूतके ।। २७ ।।**
**त्रिंशत्पुंप्रसवे ज्ञातेर्दशाहमुभयोरपि ।**

(வ்யா) ஸ்த்ரீயாக ப்ரஸவித்தால் தாயாருக்கு நாற்பது நாட்கள் ஆசௌசமும், புருஷப்ரஜையாகப்ரஸவித்தால் முப்பதுநாட்கள் ஆசௌசமும் உண்டு. ஸ்த்ரீப்ரஜையாக இருந்தால். அந்தக் கன்யகையின், ப்ராதா, (ஸோதரன், அல்லது பின்னோதரனுகிருந்தாலும் விவாஹமானவர்கள்,) பிதா, பிதாவின் ப்ராதா,(விவாஹமானவர்கள்)அவனுடைய பிள்ளைகள், (விவாஹமானவர்கள்) பிதாமஹன், அவனுடைய ப்ராதா, என்கிற ஸபின்டர்களுக்குபத்துநாட்கள் ஆசௌசம் உண்டு. புருஷப்ரஜையாக இருந்தால் ஏழுதலைமுறைவரை (விவாஹமானவர்களுக்கு) பத்துநாட்கள் ஆசௌசம் உண்டு. [ப்ரஸவம்முதல் 10 நாட்கள் வரை, தொடத்தகாமை, கர்மாவுக்கு அர்ஹதை இல்லாமை, மற்றவர்களால் பார்க்கத்தகாமை போஜனகாலத்தில் ப்ரஸவித்தவளுடைய குரல் கேழ்க்கத் தகாமை. என்கிற நான்கு விதமான அசுத்தி ப்ரஸவித்தவளுக்குச் சொல்லப்பட்டிருக்கிறது. பத்து நாட்களுக்கு மேல்

30, அல்லது, 40, நாட்கள்வரை, தொடத்தகாமை, கர்மாவில் அர்ஹதை இல்லாமை என்கிற இருவித அசுத்தி உண்டு என்றும் சொல்லப்பட்டுள்ளது. இது மேல் விவரிக்கப் படுகிறது]. (27½)

**18. 10 நாட்கள் வரை ப்ரஸவித்தவளின் தர்சநாதிகள் கூடா.**

**दशाहं दर्शनं वाक्यं सूतिकायास्त्यजेत् ततः ॥ २८ ॥**
**अघान्तं स्पर्शमेवेत्थं पितुस्तं यमलोद्भवे ।**

(வ்யா) ப்ரஸவித்தவளின் தர்சநத்தையும் குரல் கேட்பதையும் பத்து தினங்கள் விடவேண்டும். அதற்கு மேல் ஸ்பர்சத்தை மாத்ரம் வர்ஜிக்கவேண்டும். இரட்டையாகப் பிறந்தால் பிதாவுக்குப் பத்துநாட்களுக்கும் தொடத்தகாமை என்கிற அசுத்தி உண்டு. முன்பு சொன்ன 'நான்கு நாட்கள் தொடத்தகாமை' என்பது போதாது என்றபடி. (28½)

**19. 10 நாட்களுக்கு மேற்பட்ட சிசுமரணத்தில் ஜ்ஞாதிகளுக்கும் பிதாவுக்கும் ஆசௌசத்தின் முறை.**

**सद्योऽहस्त्र्यहमादन्तादाचौळादाव्रतात् परम् ॥ २९ ॥**
**पूर्णं ज्ञातिष्विति भ्रातुः पित्रोर्दशदिनं सदा ।**

(வ்யா) பிறந்த பிள்ளை பல் முளைப்பதற்கு முன் மரணம் அடைந்தால் ஜ்ஞாதிகளுக்கு ஸத்ய: சௌசம் = அதாவது ஸ்நாநத்தினால் சுத்தி. பல் முளைத்த பின்பு சௌளத்திற்கு முன் வரை ஜ்ஞாதிகளுக்கு ஒரு நாள் ஆசௌசம். சௌளத்திற்குப் பின்பு உபநயநத்திற்கு முன் வரை ஜ்ஞாதிகளுக்கு மூன்று நாட்கள் ஆசௌசம். உபநயநத்திற்குப் பின் ஜ்ஞாதிகளுக்குப் பூர்ணமான (பத்து நாட்கள்) ஆசௌசம். ப்ராதா, ஸஹோதரரோ பிந்நோதரரோ யாராயிருந்தாலும், (விவாஹமானவனுக்கு) அவனுக்கும் மாதாபிதாக்களுக்கும் பத்து நாட்களுக்குப் பின்பு எப்போது பிள்ளைக்கு மரணம் ஏற்பட்டாலும் பத்து நாட்களே ஆசௌசம். (இங்கு भ्रातु

மும் ஐந்தாவது வயதிலும் பண்ணலாமென்றும், கூறப்பட்டுள்ளது. இவற்றில் பெரும்பாலான ஸ்ம்ருதிகளில் சொல்லப் பட்ட காலத்திற்கு முன்பு நாமகரணம் முதலிய ஸம்ஸ்காரங்கள் செய்யப்பட்டிருந்தாலும், ஷி ப்ராப்தகாலம் வந்தும் ஸம்ஸ்காரங்கள் ஏதாவது ஒரு காரணத்தினுல் செய்யப்படாமலிருந்தாலும், விதிக்கப்பட்ட அந்தந்த காலத்தில் ஸம் ஸ்காரம் நடந்து மரித்தவன் விஷயத்தில் ஜ்ஞாதிகளுக்கு எப்படி ஆசௌசமோ அப்படியே இதிலும் உண்டு. (கன்யகை விஷய்த்தில் விசேஷம் आचौलात् सद्यः என்கிற ச்லோகத்தில் சொல்லப்பட்டதை இங்கு நினைக்க வேண்டும்.) (32½)

## 22. ஆசௌசத்திற்கு நிமித்தமும் - ஸம்ஸ்காரமும் - காலமும்.

**चौलात् परं भवेद्दाहो नाम्नः प्राक् खननं परम् ॥३३॥**
**दाहो वा खननं दन्तात् परं त्यागः स वाथ तत् ।**

(வ்யா) சௌளம் பண்ணப்பட்ட பிறகோ மூன்ருவது வருஷத்திற்குப் பின்போ மரித்தால் அந்த சிசுவுக்கு தஹனம் தான் ஸம்ஸ்காரம். நாமகரணத்திற்கு முன்பு (11-வது தினத்திற்கு முன்பு) மரித்தால் அந்த சிசுவுக்கு கனனம் (புதைத்தல்) தான் ஸம்ஸ்காரமாகும். நாமகரணத்திற்கு (11-வது தினத்திற்கு)ப் பின்பு ஆருவது மாஸத்துக்குள்ளோ பல் முளைப்பதற்கு முன்போ மரித்தால் அந்த சிசுவுக்கு, தஹனமோ, கனனமோ இரண்டில் ஒன்று ஸம்ஸ்காரமாகும். ஆறு மாதம் அல்லது பல் முளைத்ததற்குப் பின்பு சௌத்திற்கு (மூன்ருவது வர்ஷத்திற்கு) முன்பு வரை, கனனமோ, த்யாகமோ, தஹனமோ ஸம்ஸ்காரமாகும். த்யாகமாவது வஸ்த்ரம் முதலியவைகளால் அலங்கரித்துக் கட்டையைப் போல் ஏதாவதொரு இடத்தில் வைத்துவிடுவது. இவற்றில் தஹனஸம்ஸ்காரம் செய்தால் ஜ்ஞாதிகள் உதகதானம் செய்யவேண்டும். (33½)

## 23. புதைத்தல் முதலியவற்றுக்குக் காலமும் அவற்றின் ஆசௌச முறையும்.

**दाहेऽहः खनने सद्यो दन्तोत्पत्तेरनन्तरम् ॥ ३४ ॥**
**खननेऽहस्त्र्यहं दाहे त्यागे वा त्र्यहमिष्यते ।**

(வ்யா) பல் முளைப்பதற்கு (அல்லது ஆறு மாஸத்திற்கு) முன்பு சிசு மரணமடைந்தால் அந்த சிசுவை தஹனம் செய்தால் மாதா, பிதா, ப்ராதா தவிர மற்ற ஜ்ஞாதிகளுக்கு ஒரு நாள் ஆசௌசம். கனனம் (புதைத்தல்) செய்தால் ஸத்ய: சுத்தி (அதாவது ஸ்நாநமாத்தரம்) பல் முளைப்பதற்கு (ஆறு மாதத்திற்கு) ப்பின்பு சௌளத்திற்கு முன்பு சிசு மரித்தால் கனனம் செய்தால் ஒரு நாளும், தஹனம் செய்தாலோ, த்யாகம் செய்தாலோ மூன்று நாட்களுமாக ஆசௌசம் உண்டு (மரணமடைந்த சிசுவுக்கு வேறுதினத்தில் கனனமோ தஹனமோ த்யாகமோ ஸம்ஸ்காரம் நடந்தால் மரணம் முதல் ஆசௌசமிருந்தாலும் அதைக் கணக்கில் கொள்ளாமல் ஸம்ஸ்காரத்திற்குப் பின்பே இந்த ஸ்நான மாத்ரம், ஒரு நாள், மூன்று நாட்கள் என்கிற ஆசௌசம் கணக்கிடப்பட வேண்டுமென்று வ்யாக்க்யானத்தில் நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது.] (34½)

## 24. சௌளத்திற்குப் பின்பு ஜ்ஞாதிகளுக்கு ஆசௌசத்தின் முறை.

**चौलात् परं त्रिरात्रं स्यात् स्वजात्युक्तं व्रतात् परम् ॥ ३५ ॥**

(வ்யா) சௌளத்திற்கு (மூன்றுவது வருஷத்திற்கு)ப் பின்பு உபநயனத்திற்கு முன்பு சிசு மரணமடைந்தால் பிதா ப்ராதா, மாதா, இவர்களைத் தவிர மற்ற ஜ்ஞாதிகளுக்கு மூன்று நாட்கள் ஆசௌசம். உபநயனத்திற்கு (ஏழு வயதிற்கு)ப் பின்பு மரித்தால் பிராஹ்மணக்ஷத்ரியவைச்யர்களுக்கு அந்தந்த ஜாதிக்குச் சொன்ன பூர்ண ஆசௌசம் உண்டு. (பிராஹ்மணர்களுக்குப் பத்து நாட்கள் ஆசௌசம் முதலியவை). (35)

## 25. ராத்ரியில் ஜனன மரணங்களும் ருதுவும் ஸம்பவித்தால் தீட்டின் முறை.

**त्रियामायास्तृतीयेंऽशे यदि जन्मर्तुमृत्यवः ।**
**प्रभातादि यदि द्व्यंशे पूर्वाह्नाद्यघमिष्यते ।। ३६ ।।**

(வ்யா) ராத்ரிப் பொழுது பொதுவாக முப்பது நாழிகைகளாகும். இதில் அஸ்தமித்த பின் மூன்றே முக்கால் நாழிகை ஸாயம்ஸந்த்யாகாலமாகும். உதயத்திற்கு முன்பு மூன்றே முக்கால் நாழிகை ப்ராத:ஸந்த்யாகாலமாகும். ஆக முன் பின் உள்ள இரண்டு ஸந்த்யாகாலமும் ஏழரை நாழிகை அதாவது ஒரு யாமகாலமாகிறது. இதைத் தவிர்த்து மூன்று யாமங்கள் (22½ நாழிகை) ராத்ரியாகும், ஆகையினுல்தான் ராத்ரிக்கு 'त्रियामा' (மூன்று யாமங்கள் கொண்டது) என்று பெயர் வழங்குகிறது. இவற்றில் (இந்த மூன்று யாமங்களுள்) மூன்ருவது பாகத்தில் அதாவது உதயத்திற்கு முன்பு 11¼ நாழிகையில் ருதுவோ, ஜனனமோ, மரணமோ ஏற்பட்டால் மறு நாள் முதல் ஆசௌசம் கணக்கிடப்பட வேண்டும். முதல் இரண்டு பாகத்தில் ருது, ஜனன மரணங்கள் ஸம்பவித்தால் அதாவது அஸ்தமனத்திற்குப் பின் 18¾ நாழிகை வரையிலாஞல், முன்தினத்திலிருந்து ஆசௌசத்தைக் கணக்கிட வேண்டும். இதில் ராத்ரி மானத்தின் கூட்டலேயும் குறைத்தலேயும் அநுஸரித்து இந்த நாழிகைகளைக் கூட்டியும் குறைத்தும் யாமகாலங்களை நிச்சயிக்க வேண்டும். *(36)*

## 26. ஆஹிதாக்னி-மற்றையவர்கள் விஷயத்தில் ஆசௌசவ்யவஸ்தை.

**मृताह्वाद्यघमेकाग्नेर्यज्वनो दहनादि तत् ।**

(வ்யா) யாகம் செய்பவர்கள் ஆதானம் என்கிற காரியத்திஞல் கார்ஹபத்யம், ஆஹவநீயம், தக்ஷிணுக்னி என்கிற மூன்று அக்னிகளை ஸாதித்து அவற்றில் ஹோமம் முதலியவைகளைச் செய்வதிஞல் அவர்களுக்கு 'த்ரேதாக்னி

கள்' என்று பெயர். யாகம் செய்யாதவர்கள் இந்த மூன்று அக்னிகள் இல்லாதபடியால் 'ஏகாக்னிகள்' எனப்படுகின்றனர். இந்த ஏகாக்னிகளுக்கு மரணம் ஸம்பவித்தால் இவர்களுடைய ஜ்ஞாதிகளுக்கு 'தசாஹம்' முதலிய ஆசௌச தினக்கணக்கு மரணதினம் முதற் கொண்டு கொள்ள வேண்டும். அதாவது தஹனம் வேறு தினத்தில் நடந்தாலும் மரண தினம் முதல்தான் தசாஹம் முதலிய ஆசௌசமாகும். யாகம் செய்தவருக்கோவெனில் தஹனம் செய்த தினம் முதல்தான் ஆசௌசத்தின் கணக்கைச் செய்ய வேண்டும். தஹனம் முதல் பத்து நாட்கள் முதலிய ஆசௌசங்கள் அநுஷ்டிக்கப் படவேண்டும். மரணம் முதல் ஆசௌசமிருந்தாலும் அது கணக்கில் சேராதென்றபடி. இந்த ஏகாக்னிகள், யாகம் செய்தவர் இருவருக்கும் ஸஞ்சயன தினத்தின் கணக்கு தஹனம் முதல்தான் என்றும் வசனங்களில் சொல்லப்படுகிறது. (36½)

## 27. புனர்தஹன விஷயத்தில் வ்யவஸ்தை.

**यज्वायज्वपुनर्दाहे शिष्टाहं यद्यघाद् बहिः ॥ ३७ ॥**
**दशाहं त्र्यहमाशौचं, पूर्णं प्राक् चेदघाग्रहः ।**
**अस्थिदाहे, प्रतिकृतेर्दाहे तु त्र्यहमित्यघम् ॥ ३८ ॥**
**सपिण्डानां, सुतानां तु दशरात्रमिहेष्यते ।**

(வ்யா) அமந்த்ரகமாக தஹனம் செய்யப்பட்டாலும் சரியாக தஹனமாகாமல் அங்கத்தில் சேஷமிருந்தாலும், புத்திபூர்வமான மரணம் செய்து கொண்டாலும் இந்த விஷயத்தில் மறுபடியும் தஹனம் செய்யவேண்டுமென்று சொல்லப்பட்டிருக்கிறது. இந்த புனர்தஹனம் பத்து தினங்களுக்குள் நடந்திருந்தால் 'ஆஹிதாக்னி' 'அநாஹிதாக்னி' [யாகம் செய்தவர், யாகம் செய்யாதவர்] இருவர் விஷயத்திலும் மீதி தினங்கள் மட்டுமே ஆசௌசம். புனர்தஹனதினம் முதல் பத்து நாட்கள் கிடையாது. பத்து தினங்களுக்குப் பின்பு இவர்களுக்குப் புனர்தஹனம் செய்தால் அப்போது யாகம் செய்தவர் விஷயத்தில் பத்து தினங்களும், யாகம் செய்யாதவர் விஷயத்தில் மூன்று நாட்களும் ஆசௌசம். இப்படி

யாகம் செய்யாதவர் விஷயத்தில் மூன்று நாட்கள் ஆசௌசம் சொன்னது முன்பு ஆசௌசமிருந்து உதகதானம் செய்யாமலிருந்தால் தான். உதகதானம் செய்திருந்தால் ஷி ஆசௌசம் கிடையாது. முன்பு ஆசௌசம் பத்து நாட்களிராமலிருந்தால் பூர்ணமான அதாவது பத்து நாட்கள் ஆசௌசம். இப்படிப் பத்து நாட்கள் ஆசௌசம் விதித்தது அஸ்தி (எலும்பின்) தஹனத்தில் தான், தர்பம் முதலியவைகளால் ப்ரதிக்ருதி (ப்ரதிபிம்பம்) செய்து தஹனம் செய்தால் ஸபிண்டர்களுக்கு (ஜ்ஞாதிகளுக்கு) மூன்று நாட்கள்தான். புத்ரர்களாயிருந்தால் அவர்களுக்கு, முன்பு ஆசௌசமிருந்தாலும் இல்லாவிட்டாலும் எப்போதும் பத்து நாட்களும் ஆசௌசம் உண்டு.

(37-38½)

## 28. தூரதேசத்தில் இருப்பவனுக்கு மாதா பித்ரு மரணத்தில் ஆசௌசத்தின் முறை.

दशरात्रं सदा पित्रोः परोक्षमरणश्रुतौ ॥ ३९ ॥

त्र्यहं मातृसपत्न्यास्तु दशाहं वत्सरावधः ।

कृतोर्ध्वदैहिके त्वब्दे दिनं तस्यास्त्र्यहं तयोः ॥ ४० ॥

(வ்யா) புத்ரர்கள் தூரதேசத்திலிருந்து மாதா பிதாக்களுடைய மரணத்தை வருஷத்திற்குள்ளோ வருஷத்திற்குப் பின்போ எப்போது கேள்விப்பட்டாலும் அவர்கள் எல்லோருக்கும் பத்து நாட்கள் ஆசௌசமுண்டு. தாயாரின் ஸபத்நி (சக்களத்தி)யின் மரணத்தை வருஷத்திற்குள் கேள்விப்பட்டால் பத்துநாட்களும், வருஷத்திற்குப் பின்பு கேள்விப் பட்டால் மூன்று தினங்களும் ஆசௌசம். சரமக்ரியை நடந்திருந்து வருஷத்திற்குப் பின்பு கேள்விப்பட்டால் மாத்ரு ஸபத்நீ விஷயத்தில் ஒரு நாளும், மாதா பிதாக்கள் விஷயத்தில் மூன்று நாட்களும் ஆசௌசம் உண்டு. [வருஷத்திற்குள் மாத்ருஸபத்நீமரணத்தைக் கேள்விப்பட்டால் தாயாருக்கு ஸமமாக பத்து நாட்கள் ஆசௌசம் உண்டு. பின்பானால் மூன்று நாட்கள். மாதா பிதாக்கள் விஷயத்தில் சரமக்ரியை

பூர்ணமாக நடந்திருந்து வருஷத்திற்குப் பின்பு மூன்று நாட்கள் ஆசௌசம் விதித்தது கநிஷ்டபுத்ரன் விஷயத்தில் தான். ஜ்யேஷ்டன் விஷயமன்று ஜ்யேஷ்டன் ஸபிண்டீகரணம் முடிய செய்து அதைப் பின்பு கநிஷ்டன் கேட்டால் (வருஷத்திற்குள்) க்ஷௌரம் செய்து பத்து நாட்களும் திலோதகதானம் செய்ய வேண்டும். கநிஷ்டனுல் ஸபிண்டீகரணுந்தம் செய்யப்பட்ட பின் ஜ்யேஷ்டன் கேள்விப்பட்டால் க்ஷௌரம் செய்து பத்து தினங்களும் திலோதக மாத்ரத்தைச் செய்ய வேண்டும். பிண்டதானம் கிடையாது. பின்பு பதினோராவது தினத்தில் ஸபிண்டீகரணமாத்ரத்தைச் செய்யவேண்டும். ஏகோத்திஷ்டம் கூடாது. தம்பிகள் தவிர மற்றவர்கள் ஷைக்ருத்யத்தைச் செய்திருந்தால் ஜ்யேஷ்டன் தஹனம் தவிர மற்றவைகளை எல்லாம் செய்ய வேண்டும்.] (39-40)

### 29. ஸஞ்சயனத்திற்கு முன்பும் பின்பும் கேட்டால் புத்ரனுக்கு ஆசௌசத்தின் முறை.

शिष्टाहमेव सर्वेषामपि ज्ञातेऽन्तरा त्वघे ।
प्राक् संचयात् सुतस्येत्थं तदूर्ध्वं दशरात्रकम् ॥ ४१ ॥

(வ்யா) (ஸோதகமோ சாவமோ) தீட்டானது புத்ரன் தவிர மற்ற ஜ்ஞாதிகளுக்குப் பத்து நாட்களுக்குள் தெரிந்தால் மீதி நாட்களே ஆசௌசமாகும். (தீட்டு தெரிந்த தினத்திலிருந்து எவ்வளவு தினம் மீதியோ அவ்வளவு தினம் மட்டுமே தீட்டு.) புத்ரன் ஸஞ்சயனத்திற்கு முன்பு மாதா பிதாக்களின் மரணத்தைக் கேட்டால் மீதி நாட்களே ஆசௌசம். ஸஞ்சயனத்திற்குப் பின்பு கேட்கும் பக்ஷத்தில் கேட்ட தினத்திலிருந்து பத்து தினங்களும் ஆசௌசம் உண்டு. ப்ரவாஹம் முதலியவைகளால் அஸ்திகளுக்கு (எலும்புகளுக்கு) நாசம் ஏற்பட்டால் ஸஞ்சயனம் ஸம்பவிக்காதாகையால் அப்போது ஆசௌசத்தை எப்படி வ்யவஸ்தை செய்ய முடியுமெனில்; அஸ்தி இல்லாவிடில் அந்த தேசத்திலுள்ள, மண்ணையோ, ஓடுகளையோ, சாம்பலையோ எடுத்து அஸ்தியைப் போல மந்த்ரத்தை ஜபிக்க வேண்டுமென்றும், அந்த தேசம் முழு

வரும் ப்ரவாஹம் சூழ்ந்திருந்தால் அதற்கான மந்த்ரஜபமாத்திரத்திலேயே ஸஞ்சயனம் செய்யவேண்டுமென்றும் சொல்லப்பட்டிருப்பதால் அந்ததினத்தைக் கொண்டு தீட்டின் வ்யவஸ்தையைச் செய்து கொள்ள முடியும். சிலர், பிராம்ஹணனுக்கு ஸஞ்சயனத்துக்கு முக்யகாலமாக நான்காவது தினம் சொல்லப்பட்டுள்ளது. ஆகையால் நான்காவது நாளைக்கு முன் மாதா பிதாக்களின் மரணத்தைக் கேட்டால் மீதி நாட்கள் ஆசௌசமென்றும், நான்காவது நாளிலிருந்து கேட்டால் அது முதல் பத்து நாட்களென்றும் வ்யவஸ்தை சொல்லுகிறார்கள். நான்கு நாட்களுக்கும் முன் ஸஞ்சயனம் நடந்திருந்து அதற்குப் பின்பு கேட்டால் அது முதல் பத்து நாட்கள் ஆசௌசம் என்று த்ராவிட வ்யாக்யானத்தில் கூறப்பட்டுள்ளது. (41)

### 30. மஹாகுரு விஷயத்தில்—

उत्पाद्य पुत्रं संस्कृत्य वेदमध्याप्य यः पिता ।
कुर्याद्वृत्तिं च नष्टेऽस्मिन् द्वादशाहं महागुरौ ॥ ४२ ॥

(வ்யா) எந்தப் பிதா, புத்ரனை உண்டு பண்ணி அவனுக்கு நாமகர்மம் உபநயனம் முதலிய ஸம்ஸ்காரங்களை முறைப்படி செய்து வைத்து வேதத்தையும் அத்யயனம் செய்து வைத்து, வீடு, நிலம், தனம் முதலிய ஜீவனோபாயத்தையும் ஸம்பாதித்து வைக்கிறானோ அவனுக்கு 'மஹாகுரு' என்று பெயர். அவன் மரணமடைந்தால் அவனுடைய புத்ரனுக்குப் பன்னிரண்டு நாட்கள் ஆசௌசமாகும். (ஆனபடியினாலே பதிமூன்றுவது தினத்தில் ஸபிண்டீகரணம் பண்ண வேண்டுமென்று கருத்து என்று த்ராவிட வ்யாக்க்யானம்). (42)

### 31. அதிக்ராந்தாசௌசம் (தசராத்ர விஷயம்).

त्रिरात्रं त्रिषु मासेषु पक्षिण्येव ततस्त्रिषु ।
ततोऽहः षट्स्वथ स्नानं दशरात्रात्ययश्रुतौ ॥ ४३ ॥

(வ்யா) காலம் கடந்த விஷயத்தில் ஆசௌசம் சொல்லப்படுகிறது. பத்து நாட்கள் ஆசௌச முண்டான ஜ்ஞாதி மரணத்தைப் பத்துநாட்களுக்கு மேல் மூன்று மாதத்திற்குள் கேட்டால் முன்று நாட்கள் ஆசௌசம். நான்காவது மாதம் முதல் ஆருவது மாதத்துக்குள் கேட்டால் அப்போது பக்ஷிண்யாசௌசம்(பக்ஷிணியாவது-இரண்டுமத்யாஹ்னமும் ஒரு ராத்ரியும், அல்லது இரண்டு ராத்ரியும் ஒரு பகலும் கூடிய 90 நாழிகை. மூன்று வேளைகளாகும்.) ஆறு மாதங்களுக்கு மேல் ஆறு மாதங்களுக்குள் (வருஷத்திற்குள்) கேட்டால் ஒரு நாள் ஆசௌசம். வருஷத்திற்குப் பின்பு கேட்டால் ஸ்நாந மாத்ரத்தினுல் சுத்தி. ('க்ஷௌர தர்ப்பணங்களைப் பண்ணினுல் தர்ப்பணாநந்தரம் ஸ்நானத்தினுல் சுத்தி, க்ஷௌரயோக்யதை இல்லாத குறைந்த வயதுள்ளவன் விஷயத்தில் தர்ப்பணாநந்தரம் சுத்தி' என்று த்ராவிடவ்யாக்யானத்திலுள்ளது.) (43)

अत्याशौचं दिनं सद्यस्त्र्यहैकाहरशौचिनोः ।
पक्षिण्यधिष्वघान्तःश्रुत्स्वेककालोऽन्यदा प्लवः ॥ ४४ ॥

(வ்யா) மூன்று நாள் ஆசௌசமுள்ளவர்கள் மாதாமஹன் மாதுலன் முதலியவர்களின் மரணவிஷயத்தில் தௌஹித்ரன் மருமான் முதலியவர்களுக்கு மூன்று நாட்கள் ஆசௌசம் கூறப்பட்டுள்ளது. இவர்கள் அந்த ஆசௌச தினத்திற்குப் பின்பு பத்து நாட்களுக்குள் ஷெ மரணத்தைக் கேட்டால் ஒரு நாள் ஆசௌசம் உண்டு. ஒருநாள் ஆசௌசத்திற்கு யோக்யர்களான உபாத்யாயர், ஸுஹ்ருத், ஸ்யாலன் (மைத்துனன்) முதலியவர்களின் மரணத்தை அந்த ஒரு நாளைக்கு மேல் கேட்டால் உடன் ஸ்நாநமாத்ரத்தாலே சுத்தி. பக்ஷிண்யாசௌசத்திற்குத் தகுந்தவர்களான தாயாருடன் பிறந்தவளின் புத்ராதிகளின் மரணத்தை அந்த பக்ஷிணீ காலத்திற்குப் பின்பு கேட்டால் ஒரு காலம், அதாவது பகலில் கேட்டால் பகலும், இரவில் கேட்டால் ராத்ரியும் ஆசௌசம், பத்து நாட்களுக்கு மேல் இவர்கள் இந்த மரணத்தைக் கேட்டால் ஸ்நானமாத்ரமே. [இங்கு த்ராவிடவ்யாக்

க்யானத்தில் 'க்ஷௌரமுண்டான விஷயத்தில் க்ஷௌரமும் ஸ்நானமும் வேண்டும்' என்றுள்ளது ] (44)

## 32. அனுபநீத மரணத்தில் பித்ரு-ப்ராதாக்களுக்கு—

**पित्रोर्भ्रातुर्भवेन्नान्येष्वनुपेतात्यये त्र्यहम् ।**

(வ்யா) உபநயனமாகாதவன் மரணமடைந்து பத்து நாட்களுக்கு மேல் அதைக்கேட்டால், மாதா, பிதா, ப்ராதா இவர்களுக்கு மாத்ரமே அதிக்ராந்தாசௌசம் (கடந்த விஷயத்தில் சொன்ன '**त्रिरात्रं त्रिषु मासेषु**' மூன்று மாதங்களுக்குள் கேட்டால் மூன்று நாட்கள் ஆசௌசமென்றும், மேல் மூன்று மாதங்களுக்குள் கேட்டால், பக்ஷிணி (90 நாழிகை) ஆசௌசமென்றும், அதற்குமேல் ஆறுமாதங்களில் கேட்டால் ஒருநாள் ஆசௌசம் என்றும், ஒருவருஷத்திற்கு மேல் கேட்டால் ஸ்நானமாத்ரம் என்றும்) தீட்டு உண்டு. மற்றஜ்ஞாதிகளுக்கு இவ்விஷயத்தில் ஸ்நானமாத்ரமே தவிர ஆசௌசம் கிடையாது. (44½)

## 33. ஸூதகம் (ப்ரஸவத்தீட்டு) அதிக்ரமித்தால்—

**पितुः स्नानं तदन्येषां न च तत् सूतकात्यये ।। ४५ ।।**

(வ்யா) ப்ரஸவத்தீட்டு பத்து நாட்கள் கடந்து கேட்கப்பட்டால் பிதாவுக்கு மட்டும் ஸ்நானமாத்ரம் உண்டு. தீட்டு கிடையாது. மற்ற ஜ்ஞாதிகளுக்கு ஸ்நானமும் இல்லை. (45)

## 34. ஆசௌசத்தின் மத்யத்தில் க்ருச்ச்ராதிகள் முடிந்தால்—

**कृच्छ्रादीनां समाप्तिश्चेदघे शिष्टाहमिष्यते ।**
**तद्बहिश्चेत् त्र्यहादि स्यादित्याह भगवान् मनुः ।।४६।।**

(வ்யா) க்ருச்ச்ரம், வேதபாராயணம், ப்ராயச்சித்தம், வ்ரதம் முதலியவைகளின் நடுவில் தீட்டு ப்ராப்தமாகி, அந்தத் தீட்டின் மத்தியில் ஷை க்ருச்ச்ராதிகள் முடிந்தால், முடிந்த பின்பு பத்துநாட்களில் மீதி தினங்கள் மட்டுமே ஆசௌசம்,

க்ருச்ச்ரம் அநுஷ்டிக்கும் காலங்களில் ஆசௌசம் கிடையாது. பத்து நாட்களுக்குமேல் க்ருச்ச்ரம் முதலியவை முடிந்தால் 'त्रिरात्रं त्रिषु मासेषु' என்கிற கடந்த தீட்டு விஷயத்தில் சொல்லப் பட்ட மூன்று நாட்கள், பக்ஷிணீ (90 நாழிகை), ஒருநாள், வருஷத்திற்குப் பின்பு ஸ்நாநம் என்கிற விதி உண்டு. இந்த அதிக்ராந்த ஆசௌசம் அநுஷ்டிக்கும் போது உதகதானமும் (தர்ப்பணமும்) செய்ய வேண்டும். வருஷத்திற்குப் பின்பு உதகதானமாத்ரமும் ஸ்நானமும். தீட்டு கிடையாது. (46)

### 35. அனேக ஆசௌசங்கள் சேர்ந்தால்—

सूतके तत् पुनः स्याच्चेत् शावे तद्वाथ सूतकम् ।
पूर्वेणैवोत्तरं गच्छेन्न शावं सूतकात् क्वचित् ॥ ४७ ॥

(வ்யா) ஸூதகத்தின் மத்தியில் (அதாவது ப்ரஸவா-சௌசம் இருக்கும் போது அதன் நடுவில்) வேறு ப்ரஸவா-சௌசம் வந்தாலும், சாவத்தின் மத்தியில் (மரணாசௌச-மிருக்கும் போது) வேறு ஒரு மரணாசௌசமோ அல்லது ப்ரஸவாசௌசமோ வந்தாலும், முன் ஆசௌசத்திலேயே பின்பு ஏற்பட்ட ஆசௌசமும் போய்விடும். அதற்காகத் தனியாக ஆசௌசம் அனுஷ்டிக்க வேண்டியதில்லை. ஆனால் ப்ரஸவாசௌசம் இருக்கும் போது நடுவில் மரணாசௌசம் ஏற்பட்டால் அது முந்தைய ப்ரஸவாசௌசத்தினால் போகாது. மரணாசௌசம் பலீயஸ் ஆனபடியால் அதன் ஆசௌசத்தை அனுஷ்டித்தே ஆகவேண்டும் என்ற படி. (இங்கு 'ஸூதகாத் க்வசித் சாவம் ந கச்சேத்=ப்ரஸவாசௌசத்தினால் சிலவிடத்தில் மரணாசௌசம் போகாது' என்று சொல்லியிருப்பதால் சிலவிடத்தில் போகும் என்று ஏற்படுகிறது. அதாவது ஜனித்த குழந்தை பத்து தினங்களுக்குள் மரித்தால் அந்த மரண நிமித்தமான ஆசௌசம் மாதா பிதாக்களுக்கு ப்ரஸவாசௌசத்தினாலேயே போய்விடும் என்றதைக் கொள்ளவேணுமென்று கருத்து. இது முந்தைய ஆசௌசத்தின் ஒன்பது நாட்களுக்குள் கேட்டால் தான்) (47)

## 36. கடைசி தினத்தில் ஆசௌசங்களின் சேர்க்கை நேர்ந்தால் ஆசௌசத்தின் முறை.

पूर्वस्यान्त्यदिने तच्चेद् द्व्यहं पूर्वाघतः परम् ।
त्र्यहं पूर्वान्त्ययामे च तत्प्रभातेऽथवा यदि ॥ ४८ ॥

(வ்யா) முன் தீட்டின் கடைசி தினத்தில் அதாவது பத்தாவது தினத்தில் பிந்தைய ஆசௌசம் நேர்ந்தால் அப் போது முந்தைய ஆசௌசம் முடிந்த பிறகு மேல் பிந்தைய திற்காக இரண்டு நாட்கள் ஆசௌசம் உண்டு. கடைசி தினத்தில் பின்ராத்ரியின் கடைசி யாமத்திலோ, விடியற் காலையிலோ (அருணோதயத்திற்குப் பின்பு ஸூர்யோதயத் திற்கு முன்னதான நடுக்காலம் நான்கு நாழிகையிலோ) ஏற் பட்டால் முன் ஆசௌசம் முடிந்த பின்பு மூன்று நாட்கள் ஆசௌசம் உண்டு. [இங்கு ப்ரபாதே=விடியற்காலையில் என்று மாத்ரம் சொன்னால் அதற்கு முன் கடைசி யாமத்தில் (7½ நாழிகைகள் 3-மணிக்குள்) ஸம்பவித்தால் மூன்று நாட்கள் ஆசௌசம் சொல்லப்பட்டதாகாது. ஆகையால் अन्त्ययामे' (கடைசியாமத்தில்) என்று சொல்லப்பட்டது. அதுவே போதுமே? 'ப்ரபாதே' என்பது எதற்கு? எனில்; விடி யற்காலை என்பது ஸந்த்யாகாலம் ஆகையால் அது ராத்ரி யிலோ பகலிலோ சேராதாகையால் அதில் ஆசௌசநிமித்தம் ஸம்பவித்தால் பத்து நாட்களோ என்று ஸந்தேஹம் வரும்' என்பதைக் கொண்டு விடியற்காலையில், நேர்ந்தாலும் மேல் மூன்று நாட்களே என்று விதிக்கப்பட்டது.] (48)

दीर्घाल्पं यदि जन्माल्पाद् दीर्घमित्यघसंगतौ ।
प्रभातेऽन्त्यदिने वाप्तमपेत्यल्पं तु दीर्घतः ॥ ४९ ॥

(வ்யா) சேரும் தீட்டுக்களுக்குள் அதிகநாள் அனுஷ்டிக்க வேண்டிய பெரிய தீட்டினால், அல்பகாலம் அனுஷ்டிக்க வேண்டிய தீட்டு போய்விடும். அதாவது:—பத்து நாட் கள் அனுஷ்டிக்கும்படியான தீட்டினால் மூன்றுநாள் ஆசௌ சம், பக்ஷிணீ (90 நாழிகை) ஆசௌசம், ஒரு நாள் ஆசௌசம்,

இவைகள் போகும். இப்படியே, மூன்றுநாட்கள் ஆசௌசத்திருல் பக்ஷிணீ (90 நாழிகை) ஆசௌசமும், ஒருநாள் ஆசௌசமும், போய்விடும். பக்ஷிணீ (90 நாழிகை) ஆசௌசத்திருல் பிந்தைய ஒரு நாள் ஆசௌசமும் போய்விடும். சிறியதிருல் பெரியது போகாது. அதாவது ஒரு நாள் ஆசௌசம் முந்தினதாக இருந்து அதன் நடுவில்பக்ஷிணீ (90நாழிகை)ஆசௌசம் வந்தாலும், பக்ஷிணீ (90 நாழிகை) ஆசௌசமிருக்கும் போது மூன்று நாட்கள் ஆசௌசம் வந்தாலும், மூன்று நாட்கள் ஆசௌசம் இருக்கும் போது அதின் நடுவில் பத்து நாட்கள் ஆசௌசம் வந்தாலும் முந்தைய ஆசௌசத்திருல் பிந்தையது போகாது. அதற்கு அந்த காலத்திலேயேதான் நிவ்ருத்தி உண்டாகும். பெரிய தீட்டினுடைய கடைசி தினத்திலோ விடியற்காலையிலோ கீழ்க்கூறிய சிறிய தீட்டு ஸம்பவித்தால் அது முந்தையதோடு போய்விடும். அதற்காக அதிகப்படி தீட்டு கிடையாது. (49)

## 37. புத்ரனுக்கு எப்பொழுதும் பூர்ணசௌசமும், இதில் விசேஷமும்.

**ज्ञात्यघे चेन्मृतिः पित्रोर्मात्राशौचेऽथवा पितुः ।**
**दशाहं, पित्रघे स्याच्चेत् पक्षिणी तदघात् परम् ॥५०॥**

(வ்யா) ஜ்ஞாதியின் மரணத்திருல் ஏற்பட்ட தீட்டின் மத்தியில் மாதா பிதாக்களின் மரணம் ஏற்பட்டால் முன் தீட்டிருல் மாதா பிதாக்களின் தீட்டு போகாது. அதற்காகப் பத்து நாட்களும் ஆசௌசம் உண்டு. அம்மாதிரியே, மாதாவின் மரணத்திருல் ஏற்பட்ட தீட்டின் மத்தியில் பிதாவின் மரணம் ஸம்பவித்தாலும் முன் தீட்டிருல் பின்தீட்டு போகாது. தகப்பனுருக்காகப் பத்து நாட்கள் ஆசௌசம் உண்டு. ஆனுல் பிதாவின் மரணம் முன்பு நேர்ந்து அந்த தீட்டின் மத்தியில் மாதாவின் மரணம் ஏற்பட்டால் பிதாவின் தீட்டுக்குப்பின் மாதாவுக்காக தொண்ணூறு நாழிகை (பக்ஷிணீ) அதிகமாக அனுஷ்டிக்க வேண்டும். (50)

**स्वाशौचकालतस्त्वेव सूतिका जनकोऽग्निदः ।**
**शुद्ध्येरन्नघयोगेऽपि न पूर्वाशौचशेषतः ।। ५१ ।।**

(வ்யா) ஜ்ஞாதிகளின் தீட்டின் நடுவில் தனக்குப் பிள்ளை பிறந்தால் அப்போது ஜ்ஞாதிகளின் தீட்டினுல் புத்ரன் ஜனித்ததினுல் உண்டான தீட்டு குழந்தையின் மாதா பிதாக்களுக்குப்போகாது. தனக்கு ஏற்பட்ட காலத்தினுல்தான் (அதாவது 10 நாட்கள் முழுமையுமிருந்துதான்) நிவ்ருத்தி ஏற்படும். அம்மாதிரியே ஒரு தீட்டு இருக்கும் போது ஒருவன் தஹனம் செய்யும் பக்ஷத்தில் முன் தீட்டினுல் பின் தீட்டு போகாது. தஹனம் முதல் பத்து நாட்களும் ஆசௌசம் உண்டு. (மரணுசௌசத்திற்கு நிமித்தங்கள் - மரணமும், தஹனமும் ஆக இரண்டு. ஜ்ஞாதிகளுக்கெல்லாம் மரணுசௌசம் தான். ஸம்ஸ்காரம் செய்தவனுக்கு தஹனுசௌசம் தான் முக்யம் என்றபடி.) (51)

### 38. ஒரு கர்த்தா அனேகர்களுக்கு ஸம்ஸ்காரம் பண்ணினுல்—

**पितृभ्यानन्तरानेकान् दग्ध्वा पूर्वाघतः शुचिः ।**
**पितरौ चेद्दहेत्तत्र दशाहाच्छुचिरग्निदः ।। ५२ ।।**

(வ்யா) ஒருவன் மாதாபிதாக்களுக்குத் தவிர, மற்றவர்களுள் (ஜ்ஞாதிகளுக்கோ, ப்ராதா, பித்ருவ்யன், மாதாமஹன், மாதுலன், மாத்ருஷ்வஸா பித்ருஷ்வஸா, முதலியவர்களுள்) ஒருவர்க்கு ஸம்ஸ்காரம் செய்து ஆசௌசம் அனுஷ்டிக்கையில் அதின் நடுவில் அம்மாதிரியே வேருெருவருக்கு ஸம்ஸ்காரம் செய்ய நேர்ந்தால் முன் தீட்டினுலேயே பின் தீட்டும் போகும். பின் ஏற்பட்ட தஹனத்தின் காரணமாக அதிக ஆசௌசம் அனுஷ்டிக்க வேண்டியதில்லை. (ஆசௌசம் போனுலும் ஏகோத்திஷ்டம் மாத்ரம் அந்தந்த நிட்டின் பதினேராவது நாளிலேயே என்று சொல்லப்பட்டுள்ளது.) மற்றவர்களுக்கு ஸம்ஸ்காரம் செய்துவரும் தீட்டின் மத்தியில் மாதா அல்லது பிதாவுக்கு ஸம்ஸ்காரம் செய்ய நேர்ந்தால்

அப்போது முன் தீட்டினுல் பின்னையது போகாது. மாதா பித்ருஸம்ஸ்காரம் முதல் பத்து நாட்கள் முழுமையும் உண்டு. (52)

### 39. ஜனித்த சிசு பத்து நாட்களுக்குள் மரித்தால் பிதாவுக்கு ஆசௌசமுறை—

**सूतकान्तस्तु जातस्य मृतौ शिष्टाहमिष्यते ।**
**पितुस्तु द्व्यहमन्त्याह्ने तत्प्रभाते त्र्यहं भवेत् ।। ५३ ।।**

(வ்யா) பிறந்த சிசு பத்து நாட்களுக்குள் மரித்தால் ஜ்ஞாதிகளுக்கு ஜனன நிமித்தமான ஆசௌசம் மீதி நாட்களுக்கு மாத்ரம் உண்டு. மரணநிமித்தமான ஆசௌசம் கிடையாது; ஸ்நாநமாத்ரம். பிதாவுக்கு மரணநிமித்தமான ஆசௌசம் உண்டாலுைம் ஜனனநிமித்த ஆசௌசத்திலேயே (முன்பான அந்தத் தீட்டினுலேயே) இதுவும் போய் விடும். இதற்காக அதிகம் இருக்கவேண்டியதில்லை. ஷெ சிசு மரணம் கடைசி தினத்தில்(அதாவது பத்தாவது தினத்தில்) ஸம்பவித்தால் முன் ப்ரஸவாசௌசத்திற்கு (பத்துதினங்களுக்கு) மேலும் இரண்டு தினம் பிதாவுக்கு உண்டு. பத்தாவது தினத்தின் விடியற்காலையில் சிசு மரித்தால் பிதாவுக்கு மேலும் மூன்று நாட்களும் ஆசௌசம் உண்டு. (53)

### 40. க்ஷேத்ரஜன் முதலியவர்களுடைய ஜனனமரணங்களில் ஆசௌசம்.

**जनने क्षेत्रजादीनां तत्पित्रोस्त्र्यहमिष्यते ।**
**तज्ज्ञात्योर्दिनमेवेत्थमुपेतानां मृतौ, न चेत् ।। ५४ ।।**
**पित्रोस्त्र्यहं तयोः सद्यस्त्र्यहं तेषां पितृक्षये ।**

(வ்யா) மனு, பன்னிரண்டு விதர்களான புத்ரர்களைக் கூறியிருக்கிருர்.—ஔரஸன், க்ஷேத்ரஜன், தத்தன், க்ருத்ரிமன், கூடோத்பன்னன், அபவித்தன், என்கிற ஆறுவிதர்களான புத்ரர்களும் சொத்துரிமையுள்ள பந்துக்கள் என்

றும், 'காநீநன், ஸஹோடன், க்ரீதன், பௌநர்பவன், ஸ்வயம் ஜாதன், சௌத்ரன், என்கிற ஆறுபேரும் சொத்துரிமையில்லாத உறவினர்கள் என்றும் சொல்லியிருக்கிறார். [இங்கு த்ராவிடவ்யாக்க்யானத்தில் ஒருத்தனுடைய பார்யையினிடத்திலே அவன் அனுமதியினால் வேறொருத்தன் புத்ரோத்பாதனம் பண்ணிப் பிறந்தவன் 'க்ஷேத்ரஜன்'. புத்ரார்த்தியாயிருக்கிற ஒருத்தனுக்கு ஒரு பிதாவினாலேயே க்ரயத்ரவ்ய விசேஷங்களை வாங்கிக் கொண்டு விக்ரயம் செய்யப்பட்டவன் 'க்ரீதன்'. த்ரவ்யம் வாங்காமல் தானம் பண்ணப்பட்டவன் 'தத்தன்', கன்யகாதானத்திலேயே 'अस्यां यो जायते पुत्रः स मे पुत्रो भविष्यति' என்று வ்யவஸ்தை பண்ணிக் கொள்ளப்பட்டவன் 'புத்ரிகாபுத்ரன், ஏவமாதி புத்ரர்களுக்கு மாதா பித்ருத்வயம் உண்டாயிருக்கும் என்று சொல்லப்பட்டதை இங்கு நினைவு கொள்ளவேண்டும்) இந்த க்ஷேத்ரஜன் முதலியவர்களின் ஜனனத்தில், பீஜீ-புத்ரோத்பாதனத்தைப் பண்ணினவன், க்ஷேத்ரி-பார்யையின் பதி என்கிற இரு பிதாக்களுக்கும் மூன்று நாட்கள் ஆசௌசம், இவ்விருவர்களுடைய ஜ்ஞாதிகளுக்கும் ஒரு நாள் ஆசௌசம், இந்த க்ஷேத்ரஜன் முதலியவர்கள் உபநயனமாகி மரணமடைந்தாலும், ஷை இரண்டு பிதாக்களுக்கும் மூன்று நாட்களும், அவர்களின் ஜ்ஞாதிகளுக்கு ஒரு நாளும் ஆசௌசம். உபநயனமாகாதவர்களின் மரணமானால் இருபிதாக்களுக்கும் மூன்று நாட்கள் ஆசௌசமும், அவர்களின் ஜ்ஞாதிகளுக்கு ஸ்நானமாத்ரமும். அந்த க்ஷேத்ரஜன் முதலானவர்களுக்கும் இரு பிதாக்களின் மரண விஷயத்தில் மூன்று நாட்கள் ஆசௌசம் உண்டு. (இங்கு தத்தனுக்கும், புத்ரிகாபுத்ரனுக்கும், ஸ்வீகாரம் செய்து கொண்ட பிதாவுக்கும், மாதாமஹனுக்கும் பரஸ்பரம் பத்து நாட்கள் ஆசௌசமே சிஷ்டானுஷ்டானஸித்தம் என்று கண்டு கொள்வது என்று த்ராவிடவ்யாக்க்யானம்.]

(54½)

### 41. ஸமானோதகனுக்கு ஆசௌசம்.

जाते च सोदके प्रेते त्र्यहं सद्यो व्रतावघः ॥ ५५ ॥

(வ்யா) ஏழுதலைமுறை வரை ஜ்ஞாதிகள் என்றும், 'ஸபிண்டர்கள்' என்றும் சொல்லப்பட்டது. அதற்கு மேல் ஏழு தலைமுறை வரை 'ஸோதகர்' என்றும், 'ஸமானோதகர்' என்றும் சொல்லப்படுகிறது. அதற்குமேல் ஏழு தலைமுறை (21 தலைமுறை) வரை 'ஸகோத்ரர்கள்' என்று வழங்கப் படுகிறது. இந்த ஸோதகன் ஜனித்தாலும் உபநயனத்திற்குப் பின்பு மரித்தாலும் மூன்று நாட்கள் ஆசௌசம். உபநயனத் திற்கு முன்பு மரித்தால் ஸ்நானமாத்ரம். (55)

## 42. ரஜஸ்வலைக்கு ஆசௌசம்.

**यस्मिन् दिने रजो दृष्टं तदादि त्रिदिनं स्त्रियाः ।।**

(வ்யா) ஸ்த்ரீக்களுக்கு எந்தத் தினத்தில் ரஜஸ் (தூரம்) காணப்பட்டதோ அன்று முதல் மூன்று தினங்கள் ஆசௌசம் உண்டு. மூன்று நாட்கள் தூரத்தில் விலகியிருக்க வேண்டும் என்றபடி. நான்காவது தினத்தில் ஸ்நானம் செய்ய சுத்தி உண்டாகும். ராத்திரியில் இது ஏற்பட்டால், ராத்ரியில் ஸாயம்ஸந்த்யை மூன்றே முக்கால் நாழிகையும், மறுநாள் விடியற் காலையில் ப்ராதஸ்ஸந்த்யை முன்றே முக் கால் நாழிகையும் ஆக ஏழரைநாழிகை போக மீதியுள்ள மூன்று யாமங்களில் முதல் இரண்டு யாமங்கள் முதல் நாளோடும், மூன்றாவது யாமமாகில் மறுநாளோடும் சேர்ந் தது என்பது முன்பே சொல்லப்பட்டது இங்கு நினைக்கத் தக்கது. [ஸ்த்ரீக்களுக்கு பன்னிரெண்டு நாட்கள் வரையில் ரஜோதர்சனம் ஏற்பட்டால் மூத்ரத்திற்கு ஸமானமான அசுந்தியும், அதற்குமேல் பதினெட்டு நாட்கள் வரையில் ஸ்நானமும், அதற்குமேல் மூன்று நாட்கள் அசுத்தியும் சொல் லப்பட்டுள்ளது. இங்கு மனு 'ஸ்நானம் செய்து மறுபடி பதினெட்டு நாட்களுக்கு முன் ரஜஸ் ஏற்பட்டால் அசுத்தி இல்லையென்றும், பத்தொன்பது நாட்களுக்கு முன்பானால் ஒரு நாள் அசுத்தி என்றும் அதற்குப் பின்பானால் இரண்டு நாட்கள் ஆசௌசம் என்றும், இருபது நாட்களுக்குமேல் ஆனால் மூன்று நாட்கள் 'ஆசௌசம்' என்றும் சொல்லியிருக் கிறார். பதினெட்டு நாட்களிலிருந்து ரஜோதர்சனம் ஏற்பட்

டால் மூன்று நாட்கள் என்பதே இப்போது ஆசாரத்தி லிருந்து வருகிறது.] (55½)

**43. வெவ்வேறு தகப்பனை உடைய ஸஹோதரர்களுக்கு ஜனன மரணங்களில்-**

**अनेकपितृकावेकमातृकौ तु परस्परम् ।। ५६ ।।**
**जन्मन्यह्ना विशुद्ध्येतां मरणे तु त्रिरात्रतः ।**

(வ்யா) ஒரு தாயினிடத்தில் வெவ்வேறு புருஷர்களுக்குப் பிறந்த ஸஹோதரர்களுக்கு ஜனன விஷயத்தில் பரஸ்பரம் ஒரு நாள் ஆசௌசம். மரணத்திலாமுல் மூன்று நாட்கள் ஆசௌசம். (56½)

**44. ச்ரோத்ரியன் முதலியவர்களின் மரணத்தில் ஆசௌசம்.**

**स्वगृहे श्रोत्रिये प्रेते त्र्यहमश्रोत्रिये दिनम् ।। ५७ ।।**
**श्रोत्रिये तु मृते ग्रामे दिनमश्रोत्रिये न हि ।**

(வ்யா) ஒரு சாகையைப் பூர்ணமாய் அத்யயனம் செய்தவன் 'ச்ரோத்ரியன்' என்றும், வேதாந்த காலக்ஷேபம் பண்ணினவன் 'ச்ரோத்ரியன்' என்றும் க்ரந்தங்களில் இரு விதமாக சொல்லப்படுகிறது. இந்த ச்ரோத்ரியன் (பந்து வாயிராதவன்) ஒருவன் வீட்டில் மரணமடைந்தால் அந்த வீட்டுக்காரனுக்கு மூன்று நாட்கள் ஆசௌசமும், அச்ரோத்ரியன் தன் வீட்டில் மரணமடைந்தால் ஒரு நாள் ஆசௌசமும் உண்டு. க்ராமத்தில் ச்ரோத்திரியன் மரணமடைந்தால் ஒரு தினம் ஆசௌசம்; அச்ரோத்ரியன் மரணமடைந்தால் ஆசௌசம் இல்லை. (57½)

**45. பித்ருக்ருஹம் முதலியவற்றில் ப்ரஸவித்தால் மாதா பிதா முதலியவர்களுக்கு ஆசௌசம்**

**बन्धुष्वहस्त्र्यहं पित्रोरूढा तत्तद्गृहे यदि ।। ५८ ।।**
**प्रसूतान्यगृहे सूता मृता वा तस्य नास्त्यघम् ।।**

(வ்யா) விவாஹமானவள் ப்ரஸவத்திற்காக அழைத்து வரப்பட்டு தகப்பனுருடைய க்ருஹத்தில் ப்ரஸவித்தால் தாயார், தகப்பனூர்களுக்கு மூன்று நாட்கள் (ஆண் ப்ரஸவமானுலும் பெண் ப்ரஸவமானுலும்) ஆசௌசம். ப்ராதா, மாதுலன், மாதாமஹுன் முதலிய பந்துக்ருஹத்தில் ப்ரஸவித்தால் அந்த ப்ராதா முதலிய பந்துக்களுக்கு ஒரு நாள் ஆசௌசம். பந்துக்கள் தவிர மற்றவர்களுடைய க்ருஹத்தில் ப்ரஸவித்தாலோ மரணமடைந்தாலோ அந்த வீட்டுக்காரனுக்கு ஆசௌசம் இல்லை. [தன்னுடைய வீட்டில் ப்ரஸவநிமித்தமாக மாதாபிதாக்களுக்கு ஆசௌசம் சொன்னபடியால் வேறிடத்தில் ப்ரஸவித்தால் ஒருதினம் ஆசௌசம் என்றும் சில வசனங்கள் கூறுகின்றன. இங்குச் சிலர். வேறொருவருடைய க்ருஹத்தில் ப்ரஸவித்தாலும் அதற்கான செலவுகளைக்கொடுத்து உதவினுல் பிதாவுக்கு மூன்றுநாட்கள் ஆசௌசம் உண்டு என்று சொல்லுகிருர்கள். எப்படி லோகாசாரமோ அப்படி அநுஷ்டிக்கவும் என்று வ்யாக்யானம் கூறுகிறது.] (58½)

## 46. புத்ரிக்கும்-மாதாபிதாக்களுக்கும் மரணத்தில் பரஸ்பரம் ஆசௌசம்.

**परोक्षे पक्षिणी नो चेत् त्र्यहं प्रेतान्नभोजने ॥ ५९ ॥**
**दशरात्रं मृतौ पुत्र्याः पित्रोश्चान्योन्यमित्यघम् ।**

(வ்யா) விவாஹமான பெண்ணின் மரணத்தில் மாதாபிதாக்களுக்கு தூரதேசத்தில் இருந்தால் பக்ஷிணீ (90 நாழிகை)யும், ஸமீபத்தில் இருந்தால் மூன்றுநாட்களும் ஆசௌசம். மாதாபிதாக்களின் மரணத்திலும் விவாஹமான பெண்ணுக்கு ஸமீபத்திலானுல் மூன்றுநாட்களும், தூரதேசத்திலானுல் பக்ஷிணீ (90நாழிகை)யும் ஆசௌசம் உண்டு. ப்ரேதக்ருஹத்தில் போஜனம் செய்தால் இவர்களுக்குப் பத்துநாட்களும் ஆசௌசம் உண்டு. ['अघे भोक्तुर्यथाशौचम्' என்று தீட்டுக்காரருடைய வீட்டில் போஜனத்திற்குத் தீட்டு முன்னமே சொல்லியிருந்தபோதிலும், 'தீட்டில்லாத என்

பெண்தான் தனிமை பண்ணுகிறாள். ஆகையினால் சாப்பிட லாம் என்கிற மோஹத்தைப் போக்கடிப்பதற்காக மறுபடி யும் இதற்கு ஆசௌசம் சொன்னது என்று வ்யாக்க்யானத் தில் கூறப்பட்டுள்ளது.] [த்ராவிட வ்யாக்க்யானத்தில் शिष्टाहं चन्द्रवम् என்கிற வசனப்படி உபரி சாந்த்ராயணம் அநுஷ்டிக்க வேண்டாமென்கிறார் என்றுள்ளது.] (59½)

## 47. பராச்ரிதையான பார்யையின் பர்த்தாக்களின் மரணத்தில் ஆசௌசம்.

**पराश्रितायां भार्यायां मृतौ पत्योस्त्रिरात्रकम् ॥ ६० ॥**
**तत्पक्षयोर्दिनं, तस्यास्त्र्यहं भर्त्रोश्च संस्थितौ ।**

(வ்யா) ஒருத்தி ஒருவனை விவாஹம் செய்து கொண்ட பின்பு வேறொருவனை அடைந்திருந்தால் அவளுடைய மரணத்தில் இரண்டு பர்த்தாக்களுக்கும் மூன்றுநாட்கள் ஆசௌசம். அந்த இரு பர்த்தாக்களின் ஜ்ஞாதிகளுக்கு ஒரு நாள் ஆசௌசம், அந்த பர்த்தாக்களின் மரணத்தில் அந்த பார்யைக்கும் மூன்றுநாட்கள் ஆசௌசம் உண்டு. [இந்த மூன்று நாட்கள் ஆசௌசம் சொன்னது ப்ரதிலோமமல்லா தவனை [அதாவது தாழ்ந்தவனாக இல்லமாலிருக்கும் புருஷனை ஆச்ரயித்திருக்கும் விஷயத்தில்தான். ப்ரதிலோமஜாதியை ஆச்ரயித்திருந்தால் ஸ்நானமாத்ரமே' என்று வ்யாக்க்யானத் தில் கூறப்பட்டுள்ளது. மூன்று நாட்களும் ஸமீபத்திலிருந் தால் தான் ஆகுமும். பரோக்ஷத்திலானால் ஒருநாள் தான் ஆசௌசம் என்றும் ஜ்ஞாதிகளுக்கு ஸ்நானமாத்திரம் தான் என்றும் கூறப்பட்டுள்ளது.] (60½)

## 48. மருமான் தௌஹித்ரன் முதலியவர்களின் மரணத்தில் ஆசௌசம்.

**भागिनेये च दौहित्रे मृते तु त्र्यहमिष्यते ॥ ६१ ॥**
**पक्षिण्युपनयात्पूर्वं वसिष्ठो मुनिरब्रवीत् ।**

(வ்யா) உபநயனமான மருமானுடைய மரணத்தில் அவனுக்குப் பிரதியோகியான (தன்னை மருமானுக்கின)

மாதுலன் (அம்மான்) மாதாவின் ஸஹோதரிகள் இவர்களுக்கு மூன்று நாட்கள் ஆசௌசம். (தான் யாருக்கு மருமான் ஆகிருனோ? அவனை மருமானுக்கு ப்ரதியோகீ ப்ரதி ஸம்பந்தி என்று கூறுவது சாஸ்த்ர வழக்கு) உபநயனமான தௌஹித்ரனுடைய மரணத்தில் மாதாமஹன் மாதாமஹீ இவர்களுக்கு மூன்று நாட்கள் ஆசௌசம். உபநயனத்திற்கு முன்பு மரணமடைந்தால் அவர்களுக்கு பக்ஷிணீ (90நாழிகை) ஆசௌசம் என்று வஸிஷ்டர் சொன்னார். [இப்படி உபநயனமாகாத மருமான் விஷயத்தில் தான் மாதாவின் ஸஹோதரி அம்மான் இவர்களுக்கு பக்ஷிணீ ஆசௌசம் விதித்திருப்பதால் உபநயனமாகாத, மாதுலனின் மரணத்திலும், தாயாரின் விவாஹமாகாத ஸஹோதரியின் மரணத்திலும் மருமானுக்கு ஸ்நாநமாத்ரமே என்று வ்யாக்க்யானம் கூறுகிறது.] 'இது [பக்ஷிண்யாசௌசம் என்பது] சௌளாநந்தரம் என்று சிஷ்டாசார ஸித்தம்' என்று த்ராவிட வ்யாக்க்யானத்தில் உள்ளது.] (61½)

## 49. மாமனார் முதலியவர்களின் மரணத்தில் ஆசௌசம்.

**श्वश्रूश्वशुरस्वाचार्यतत्पत्नीतत्सुतर्त्विजाम् ॥ ६२ ॥**
**याज्यान्तेवासिनोर्नाशे त्र्यहमित्याह गौतमः ।**

(வ்யா) மாமியார், மாமனார் இவர்களுடைய மரணத்தில் மாப்பிள்ளைக்கு மூன்று நாட்கள் ஆசௌசம். (இங்கு த்ராவிட வ்யாக்க்யானத்தில் 'ஜாமாத்ரு மரணத்தில் ச்வச்ரூ-ச்வசுரர்களுக்கு ஆசௌசத்தை விதிக்கும் வசனம் இல்லை' என்று உள்ளது.] ஆசார்யலக்ஷணம் - உபநயனம் செய்து வைத்து வேதத்தைச் சொல்லி வைத்து ரஹஸ்யார்த்தங்களையும் உபதேசிப்பவன்' என்று கூறப்பட்டுள்ளது. [த்ராவிட வ்யாக்க்யானத்தில் - காயத்ரீ உபதேஷ்டா, ஸ்ரீமதஷ்டாக்ஷர-த்வயாத்யுபதேஷ்டா, வேதாந்தவித்யோபதேஷ்டா' என்று ஆசார்ய லக்ஷணம் இவ்வசனத்திற்கு அர்த்தமாக நிஷ்கர்ஷிக்கப்பட்டுள்ளது.) இப்படிப்பட்ட ஆசார்யன், அவருடைய பத்னீ, புத்ரன், இவர்களுடைய மரணத்தில் சிஷ்ய

னுக்கு மூன்று நாட்கள் ஆசௌசம். யாகத்தில் வழக்கமாக வரிக்கப்பட்டுக் கார்யங்களை நிர்வஹிக்கும் ரித்விக்கின் மரணத்தில் யாகம் செய்பவனுக்கும், யாகம் செய்பவனுடைய மரணத்தில் ஷெ ரித்விக்குக்கும் மூன்று நாட்கள் ஆசௌசம். குருகுல வாஸியான சிஷ்யனின் மரணத்தில் ஷெ ஆசார்ய னுக்கும் மூன்று நாட்கள் ஆசௌசம் என்று கௌதமமுனிவர் கூறுகிறார். (62½)

## 50. மாதாவின் ஸஹோதரீ முதலியவர்களின் விஷயத்தில்-

**मातृष्वसृपितृभ्रातृमृतौ तत्प्रतियोगिनः ।। ६३ ।।**
**पुंसस्त्र्यहं मातुलानीमातामह्योर्मृतौ तथा ।**

(வ்யா) தாயாரின் ஸஹோதரிகளின் மரணத்தில் மரு மானுக்கு மூன்று நாட்கள் ஆசௌசம். (ஒருவன் தன் தாயாருடன் பிறந்தவனுக்குத் தான் மருமான் ஆவது போலவும், தன் தகப்பனாரின் உடன் பிறந்தவளுக்குத் தான் மருமான் ஆவது போலவும் தன் தாயாருடன் பிறந்த ஸ்த்ரீக் களுக்கும் தான் மருமான் ஆகிறான் என்கிற கருத்தில் இவ்வாறு கூறப்பட்டுள்ளது.) மாதாமஹன், மாதாமஹீ இவர்களின் மரணத்தில் தௌஹித்ரனுக்கு மூன்று நாட்கள் ஆசௌசம். அம்மான், அம்மாமி இவர்களின் மரணத்தில் மருமானுக்கு மூன்று நாட்கள் ஆசௌசம். [இங்கு மாதாமஹீ, அம்மாமி இவர்களைத் தனியாகச் சொன்னது பர்த்தாவின் மரணத்திற்குப் பிறகும் ப்ரதி யோகியான மருமானுக்கும் இவர்களுக்கும் பரஸ்பரம் மரண விஷயத்திலும் இந்த ஆசௌசம் உண்டு என்று தெரிவிப் பதற்காக என்று வ்யாக்யானம் கூறுகிறது.] (62½)

## 51. பக்ஷிண்யாசௌசம்

**मातृष्वसृसुतापुत्रौ पितृष्वसृसुतस्त्रियौ ।। ६४ ।।**
**स्वसा पितृव्यपुत्री च स्वसृपुत्री पितृष्वसा ।**

**भ्रातृपुत्री च दौहित्री पौत्री तत्प्रतियोगिनौ ॥ ६५ ॥**
**स्त्रीपुंसौ च क्वचित् प्रेते पक्षिण्याशौचिनौ मिथः ।**

(வ்யா) விவாஹத்திற்கு முன்பு எந்த ஸ்த்ரீமரணத்தில் எவர்களுக்கு ஸ்நானமாத்திரம் முதலியன விதிக்கப்பட்டனவோ, அவர்களுக்கு விவாஹத்திற்குப் பின்பு அந்த ஸ்த்ரீமரணத்திலும், அவர்களுடைய மரணத்தில் அந்த ஸ்த்ரீக்கும் பரஸ்பரம் பக்ஷிண்யாசௌசத்தை இரண்டு ச்லோகங்களால் கூறுகிறார்:—

(தாயாருடைய ஸஹோதரியின்) சிறிய தாயார், பெரிய தாயார், இவர்களுடைய பிள்ளை பெண்கள் இவர்களுக்கு பரஸ்பரம் மரணவிஷயத்தில் பக்ஷிணீ (90 நாழிகை) ஆசௌசம். அத்தான், அத்தங்கார் இவர்களுக்கும், இவர்களுடைய ப்ரதியோகிகளான மறுபுறத்தவரான அம்மாஞ்சி. அம்மங்கார் இவர்களுக்கும் பரஸ்பரம் பக்ஷிணீ (90 நாழிகை) ஆசௌசம். தங்கை தமக்கை இவர்களுக்கு ப்ரதியோகிகளான (மறுபுறத்தவரான) உடன் பிறந்த பெண்கள் - உடன் பிறந்த பிள்ளைகள் இவர்களுக்கும் பரஸ்பரம் பக்ஷிணீ (90 நாழிகை) ஆசௌசம். (தமக்கை மரணத்தில் தம்பிக்கு பக்ஷிண்யாசௌசமானாலும் க்ஷௌரம் உண்டு என்று த்ராவிட வ்யாக்க்யானத்தில் உள்ளது.

பித்ருவ்யபுத்ரீ - பெரிய தகப்பனார் சிறிய தகப்பனாரின் பெண், இவளுக்கு ப்ரதியோகிகள்-பெரிய தகப்பனார் சிறிய தகப்பனார்களுடைய பெண்களும் பிள்ளைகளும் இவர்களுக்கு பரஸ்பரம் பக்ஷிணீ (90 நாழிகை) ஆசௌசம். ஸ்வஸ்ருபுத்ரீ- தங்கை தமக்கைகளுடைய பெண்கள் இவர்களுக்கு ப்ரதியோகிகள் (மறுபுறத்தவரான) சிறிய தாயார் பெரிய தாயார் அம்மான் இவர்கள். இவர்களுக்குப் பரஸ்பரம் பக்ஷிணீ (90 நாழிகை) ஆசௌசம். பித்ருஷ்வஸா-பிதாவின் ஸஹோதரி-அத்தை, இவளுக்கு ப்ரதியோகிகள் - மருமான் - மருமாள் இவர்களுக்குப் பரஸ்பரம் பக்ஷிணீ (90 நாழிகை) ஆசௌசம்

(அத்தையுடைய மரணத்திலும் மருமானுக்கு க்ஷௌரம் உண்டு என்று த்ராவிடவ்யாக்யானம்,

ப்ராத்ருபுத்ரீ - தம்பி-தமையன் பெண், இவளுக்கு ப்ரதி யோகிகள் - அத்தை - சிறியதகப்பனுர் - பெரிய தகப்பனுர் இவர்களுக்குப் பரஸ்பரம் பக்ஷிணீ (90 நாழிகை) ஆசௌசம். தௌஹித்ரீ - பெண்ணின் பெண் இவளுக்கு ப்ரதியோகிகள் மாதாமஹனும் மாதாமஹீயும். இவர்களுக்குப் பரஸ்பரம் பக்ஷிணி (90 நாழிகை) ஆசௌசம் பௌத்ரீ - பிள்ளையின் பெண், இவளுக்கு ப்ரதியோகிகள் பிதாமஹனும் பிதாமஹீ யும். இவர்களுக்குப் பரஸ்பரம் பக்ஷிணீ (90 நாழிகை) ஆசௌசம்.

'இந்த பக்ஷிண்யாசௌசவிதியில், தௌஹித்ரீ - பௌத்ரீ' என்கிற மாதிரி ஸ்த்ரீவ்யக்திகளை அவலம்பித்து பக்ஷிண்யாசௌசம் எவர்களுக்கு விதிக்கப்பட்டதோ அவர் களுடைய பர்த்தாக்களின் மரணத்தில் ஸ்நாநமாத்ரமே தவிர ஆசௌசம் கிடையாது. அப்படியே அத்தான், அம்மாஞ்சி என்ருப்போலே எந்த புருஷ வ்யக்திகளை அவலம் பித்து பக்ஷிண்யாசௌசம் விதிக்கப்பட்டதோ அவர்களின் பத்நீமரணத்தில் ஸ்நாநமாத்திரமே. ஆசௌசம் இல்லை, என்று வ்யாக்யானத்தில் கூறப்பட்டுள்ளது. இங்கு பக்ஷிணியாவது இரண்டு பகலுடன் கூடின ராத்திரியோ, இரண்டு ராத்திரியுடன் கூடின பகலோ ஆகும். 90 நாழிகை என்றபடி.

[யோனிஸம்பந்தமுள்ளவர்களுக்கு பக்ஷிண்யாசௌசம்' என்று கௌதமவசனம். யோனிஸம்பந்திகள் - அம்மான், அம்மாஞ்சி நாயாரின் ஸஹோதரிகள், சிறியநாயார் பெரியநாயார் - அவர்களின் பிள்ளைகள், தங்கை, தமக்கை, மருமான், அத்தை, அத்தான் முதலியவர்கள். இங்கு யோனிஸம்பந்தம் மூன்று தலைமுறை வரையாகும். ஆகை யினுல் கூடஸ்தர்களான தம்பதிகளிடம் உண்டானவர் களும், கூடஸ்தனும் கூடஸ்தஸ்தானத்தில் உள்ளபடியால் கூடஸ்தனுடைய ப்ராதாவுமான இருவர்களும், மூன்று

தலை முறை வரையிலுள்ளவர்களும் பரஸ்பரம் பக்ஷிண்யா சௌசம் அநுஷ்டிக்க வேண்டும்.

இந்த பக்ஷிணீ விவாஹத்திற்குப் பிறகு தான். இதில் பர்த்தாவுக்கு உள்ள தீட்டுக்கள் எல்லாம் பத்னிக்கும் உண்டாகையால் யோனிஸம்பந்திகளுடைய பத்னிகளுக்கும் பக்ஷிணீ உண்டு. யோனிஸம்பந்தத்தைக் காரணமாக வைத்தே பக்ஷிணீ விதித்தபடியால் அவர்களுடைய பத்னிகளுக்கு ஷெ ஸம்பந்தமில்லாதபடியால் அந்த பத்னிகளுடைய மரணத்தில் அவர்களின் ப்ரதியோகிகளுக்கு இந்த பக்ஷிணீ விதி கிடையாது. இங்கு நிர்ணயத்தைப் பின்வருமாறு அறியலாம் - ஒரு ஸ்த்ரீ மரணம் அடைந்தால் - பக்ஷிண்யா சௌசமுள்ளவர்கள்:-(1) தாயாரின் ஸஹோதரி (2) அம்மான், (3) உடன் பிறந்தவள், (4) ப்ராதா (5) அத்தை இந்த ஐந்து பேர்களுடைய பெண்கள் (5) பிள்ளைகள் (5), (16) பௌத்ரீ (பிள்ளையின் பெண்) (17) பிதாமஹன் (தகப்பனின் தகப்பனுர்) (18) மாதாமஹன் (தாயாரின் தகப்பனுர்.) (19) தௌஹித்ரீ (பெண்ணின் பெண்) (20) பித்ருவ்யன் (தகப்பனுரின் ஸஹோதரன், சிறிய தகப்பனுர் அல்லது பெரிய தகப்பனுர்) (21, 22) பித்ருவ்யனின் பெண், பிள்ளை- ஆக இருபத்திரண்டு பேரும், தூரதேசத்திலுள்ள (23) பெண், (24) பிதாவும் (25) தௌஹித்ரனும். மேற் கூறிய புருஷர்களின் பத்னிகள் (13) பதிமூன்றுபேரும் ஆக 38 பேர்களும் ஆவார்கள்.

ஒரு புருஷனுடைய மரணத்தில் பக்ஷிண்யாசௌசம் உள்ளவர்கள் - தாயாருடைய ஸஹோதரியின் பெண்கள், அத்தையினுடைய பெண்கள், இவர்களுடைய பிள்ளைகள், அவர்களின் பத்னிகள், அத்தை, கூடப்பிறந்தவள். பௌத்ரீ (பிள்ளையின் பெண்) ப்ராதாவின் புத்ரீ, உடன் பிறந்தவளின் பெண், பித்ருவ்யனின் (தகப்பனுருடன் பிறந்தவனுடைய) பெண், தௌஹித்ரீ (பெண்ணின் பெண்) அம்மானின் பெண், பிள்ளை (அம்மாஞ்சி) அவனுடைய பத்னீ, தூரதேசத்திலிருக்கும் பெண், தூரதேசத்திலிருக்கும்

மருமான், அவனுடைய பத்னீ, தூரதேசத்திலிருக்கும் மாதா மஹன், மாதாமஹீ, மாதாவின் ஸஹோதரீ, அம்மான், அம்மாமி இவர்கள் இருபத்தி ஐந்து பேர்கள் ஆவார்கள். தாய் வழியிலோ தகப்பன் வழியிலோ எந்த புருஷர்கள் விஷயத்தில் பக்ஷிண்யாசௌசம் சொல்லப்பட்டுள்ளதோ அவர்களின் பத்னீமரணத்தில் அந்த ஆசௌசம் கிடையாது. ஸ்நானமாத்ரமே விதிக்கப்படுகிறது.] (64, 65½)

## 52. வேறு மாதா - பிதா முதலியவர்கள் விஷயத்தில்-

**भिन्नपित्रोः पितृभ्रातृस्वस्रपत्यानि तत्प्रजाः ॥ ६६ ॥**
**शुध्यन्त्यह्ना मिथःशावे जनास्तत्प्रतियोगिनः ।**

(வ்யா) எவனுடைய பத்னீ வேறொருவனை அடைந் தாளோ அவர்களில் முதலானவன் 'க்ஷேத்ரீ' என்றும், இரண்டாமவன் 'பீஜீ' என்றும் சொல்லப்படுகிறான். இவ் விருவருடையவும், இவர்களுடைய பத்னிகளுடையவும் மாதாபிதாக்கள், ப்ராதாக்கள், ஸஹோதரிகள், பெண்கள், பிள்ளைகள், இவர்களின் பெண்-பிள்ளைகள் இவர்களெல் லோரும் இவர்களின் ப்ரதியோகிகளின் மரணத்தில் அதாவது க்ஷேத்ரீ-பீஜீ இவர்களின் பிள்ளை பெண்களின் மரணத்தில் பரஸ்பரம் ஒருநாள் ஆசௌசமுடையவர்கள். தாயாரின் ஸபத்னியின் (சக்களத்தியின்) தாய், தந்தை, ப்ராதா, உடன் பிறந்தவள் அத்தை இவர்களுக்கும் இவர் களின் பெண், பிள்ளைகளுக்கும், ப்ரதியோகியான ஸபத்னீ-புத்ரனின் மரணத்தில் பரஸ்பரம் ஒருநாள் ஆசௌசம் என் றும் இங்கு வ்யாக்யானம் செய்யப்பட்டிருக்கிறது. [ஸபத்னி யான ஒருவளுக்கு மற்றொரு ஸபத்னியின் மாத்ரு பித்ருவர்கங் களைச் சேர்ந்தவர்களின் மரணத்தில் ஆசௌசம் கிடையாது. பந்துவானபடியால் ஸ்நானமாத்ரம் என்றும் வ்யாக் க்யானத்தில் கூறப்பட்டுள்ளது.] (66½)

## 53. உபநயனத்திற்குப் பின்பே முற்கூறிய ஆசௌசங்கள்.

**ऊर्ध्वमेवोपनीतेः स्यात् त्र्यहपक्षिण्यहर्विधिः ॥ ६७ ॥**
**प्राक् सद्यः शौचमुद्वाहः स्त्रीणामुपनयो मतः ।**

(வ்யா) ஸமானோதகன், யோநிஸம்பந்திகளான மாத்ரு பித்ருவர்கங்கள். ஸகோதரர்கள் இவர்கள் விஷயத்தில் சொன்ன, மூன்றுநாட்கள், பக்ஷிணீ, ஒருநாள் ஆசௌசமானது - உபநயனத்திற்குப் பின்புதான். உபநயனத்திற்கு முன்பு ஸ்நாநமாத்திரத்தாலேயே சுத்தி. (இங்கு யோனிஸம்பந்திகள் விஷயத்தில் ஸ்நாநத்தினால் சுத்தி சொன்னதானது உபநயனமாகாத மாத்ருஸஹோதரி, மாதுலன் முதலியவர்களுடைய மரண விஷயத்தில்தான். தௌஹித்ரன், மருமான், இவர்களின் மரணவிஷயத்திலன்று. அவர்களின் மரணவிஷயத்தில் உபநயனத்திற்கு முன்பும் பக்ஷிண்யாசௌசம் சொல்லப்பட்டுள்ளது.] ஸ்த்ரீக்களுக்கு உபநயனமாவது விவாஹமே என்று கொள்ளவேண்டும். (67½)

### 54. ஸகோத்ரனின் மரணத்தில்-

**बन्धौ स्नानं सगोत्रेऽहर्ज्ञेयसंबन्धके मृते ।। ६८ ।।**

(வ்யா) மாதாபிதாக்களின் ஸம்பந்தமுடையவர்களுள் ஸம்பந்தம் தெரிந்த பந்துக்களின் மரணத்தில் ஸ்நாநமாத்ரம். பதினான்கு தலைமுறைகளுக்கு மேல் இருபத்தோரு தலைமுறை வரையிலான ஸகோத்ரர்களின் மரண விஷயத்தில் ஒருநாள் ஆசௌசம். (68)

### 55. ஸப்ரஹ்மசாரி முதலியவர்கள் விஷயத்தில்-

**सब्रह्मचारिण्येकाहं सहाध्यायिनि पक्षिणी ।**
**उपाध्यायसुहृत्स्यालभूभृत्सु च मृतेष्वहः ।। ६९ ।।**

(வ்யா) ஒரு ஆசார்யனால் உபநயனம் செய்விக்கப்பட்டவனும், தன்னோடு கூடி வேதத்தின் ஒருபாகத்தை அத்யயனம் செய்தவனும் 'ஸப்ரஹ்மசாரி' எனப்படுகிறான். இவன் மரணத்தில் ப்ரதியோகிக்கு அதாவது ஆசார்யன், ஸப்ரஹ்மசாரி இவர்களுக்கு ஒருநாள் ஆசௌசம். பூர்ணமாகத் தன்னோடு கூட வேதாத்யயனம் செய்தவன் 'ஸஹாத்யாயீ'

இவன் விஷயத்தில் மற்ருெருவனுக்கு பக்ஷிணீ (90 நாழிகை) ஆசௌசம் வேதத்தின் ஒரு பாகத்தையோ, வேதாங்கங்களின் ஒரு பாகத்தையோ ஓதுவித்தவன் 'உபாத்யாயன்' எனப்படுகிருன். இவனுடைய மரணத்தில் ப்ரதியோகியான சிஷ்யனுக்கும், எப்போதும் ஹிதத்தையே விரும்பும் ஸ்நேஹி தன் விஷயத்தில் மற்றவனுக்கும், மைத்துனன் (பத்னியின் ப்ராதா) விஷயத்தில் ஸஹோதரியின் பர்த்தாவுக்கும், மண்டலாதிபதியான க்ஷத்ரியனுடைய மரணவிஷயத்திலும் ஒருநாள் ஆசௌசம் ஆகும். (ஸஹோதரி விஷயத்தில் பக்ஷிண்யாசௌசம் சொல்லப்பட்டபடியால் ஸஹோதரியின் பர்த்தாவின் மரணத்தில் மைத்துனனுக்கு ஸ்நானமாத்ரமே என்று த்ராவிடவ்யாக்யானத்தில் உள்ளது.]

[ஸத்யச்சௌசம் — 'மரண விஷயத்தில் ஸசேலமாக ஸ்நானம் செய்வது' என்று சொல்லப்பட்டுள்ளது, 'மரண விஷயத்தில் என்பதனுல் ப்ரஸவத்திலும், ப்ரஸவாசௌசத்தின் கடந்த விஷயத்திலும் பிதா தவிர மற்றவர்களுக்கு ஸ்நானம் இல்லை என்பதாயிற்று.] (69)

## 56. மாமனுர் முதலியவர்களுக்கு ஆசௌசம் இன்மை.

**श्वश्रूश्वशुरतत्पुत्रयाज्याचार्यसुतर्त्विजाम् ।**
**उपाध्यायस्य सद्यः स्यान्मृतौ तत्प्रतियोगिनाम् ॥ ७० ॥**

(வ்யா) மாமனுர் மாமியார்களுக்கு ப்ரதியோகியான மறுபக்கத்தவரான மாப்பிள்ளையின் மரணத்தில் ஸ்நானமாத்ரம். மைத்துனனுக்கு ஸஹோதரீ பர்த்ரு மரணத்தில் ஸ்நான மாத்ரம். ஆசார்யனின் பிள்ளைக்கும் வேதத்தின் ஒரு பாகத்தை அத்யயனம் செய்து வைத்த உபாத்யாயனுக்கும் இவர்களின் ப்ரதியோகியான சிஷ்யனின் மரணத்தில் ஸ்நான மாத்ரம். குலக்ரமமாகவல்லாமல், தாத்காலிகமாக யாகம் செய்து வைக்கப்பட்டவன், செய்து வைத்த ருத்விக் இவர்களுக்கு ப்ரதியோகிகளின் மரணத்தில் ஸ்நானமாத்ரம். [குலக்ரமயான ருத்விக்கு விஷயத்தில் மூன்று நாட்கள் ஆசௌசம் முன்பு சொல்லப்பட்டது.] (70)

57. ராஜ்யத்தில் குழப்பம் முதலியவைகளில்—

राष्ट्रक्षोभे च दुर्भिक्षे व्याधावित्यादिकापदि ।
सद्यश्शौचं भवेदापन्निस्तरोपायकर्मसु ।। ७१ ।।

(வ்யா) ராஜ்யத்தில் குழப்பம், கடும் பஞ்சம், வ்யாதி முதலிய ஆபத்காலங்களில் ஆபத்திலிருந்து விடுபடுவதற்காகச் செய்யப்படும் கார்யங்களில் உடனடியாக சுத்தி உண்டு. 'அப்போது தீட்டு இல்லை' என்றபடி. (71)

58. கோ - ப்ராஹ்மணர்களுக்காக ஏற்பட்ட மரணத்தில் தோஷம் இல்லாமை.

गोविप्रस्त्रीकृते प्रेते राज्यार्थं वा हते युधि ।
शौचं चोर्ध्वक्रियाः सद्यो यद्यनिच्छास्त्यघं मृतौ ।। ७२।।

(வ்யா) பசு, ப்ராஹ்மணன், ஸ்த்ரீ, இவர்களைப் பாதுகாப்பதற்காக மரணம் அடைந்தாலும் ராஜ்யரக்ஷணத்திற்காக யுத்தத்தில் கொல்லப்பட்டாலும் இவனுக்கு உடன் சுத்தியே தவிர அசுத்தி இல்லை. ஆகையால் உடனடியாக தஹனம் முதலிய க்ரியைகளைச் செய்யலாம். ஜ்ஞாதிகளும் ஆசௌசம் அனுஷ்டிக்கலாம். வேறுகாலத்தை எதிர் பார்க்க வேண்டியதில்லை. ப்ராணனை விட்டாகிலும் காப்பாற்ற வேணும் என்கிற எண்ணத்துடன் சென்று மரித்தவன் விஷயத்தில் தான் இது. ராஜதண்டனையில் பயத்தினலோ வேறு நிர்பந்த வசத்தினலோ இவைகளில் மரிப்பதற்கு இச்சையில்லாமலிருக்கும் போது மரணம் அடைந்தவனுக்கு அசுத்தி உண்டு. அதாவது உடனடியாக க்ரியைகளைச் செய்வதும் ஜ்ஞாதிகள் ஆசௌசம் அனுஷ்டிப்பதும் கூடாது. வேறு காலத்தை ப்ரதீக்ஷிக்க வேணும், துர்மரணம் அடைந்தவன் மாதிரி என்றபடி. (72)

59. துர்மரணவிஷயத்தில் காலாந்தரத்தில் க்ரியை செய்யவேண்டியது.

एकरात्रं भवेद् युद्धक्षतैः कालान्तरे मृते ।

(வ்யா) எவனொருவன் க்ஷத்ரியதர்மத்தினுல் யுத்தத்தில் நோக்குடன் யுத்தம் செய்து ஆயுதங்களால் அடிபட்டு உடனடியாக மரணம் அடையாமல் வேறு தினத்தில் மரணம் அடைகிருனே அவன் விஷயத்தில் ஒருநாள் அசுத்தி உண்டு. ஒருநாள் கழித்து க்ரியைகளைச் செய்ய வேண்டும் என்றபடி.)

**अन्वक्षं शृङ्गिचोरान्त्यविद्युच्छस्त्रविषाग्निभिः ॥ ७३ ॥**
**प्रायोऽनशनतोयाद्यैर्मृते कामात् प्रवृत्तितः ।**

(வ்யா) பசு, யானை, முதலிய கொம்புள்ளவைகளாலும், கள்ளர்களாலும், சண்டாளனாலும், மின்னலினுலும் (இடியினுலும் என்றபடி) ஆயுதங்களாலும், விஷத்தினுலும், அக்னியினுலும், நிஷித்தமான மஹாப்ரஸ்தானத்தினுலும் கோபம் முதலியவைகளினுல் சாப்பிடாமலிருந்தும், ஜலம் முதலியவைகளினுலும் மரணம் ஏற்படுமென்று தெரிந்திருந்தும் தன்னைப் பாதுகாத்துக் கொள்ள வேணுமென்கிற சாஸ்திரத்தை மீறித் தன்னிச்சையால் இவைகளினுல் மரணம் அடைந்தவன் புத்திபூர்வமாக துர்மரணமடைந்தவனுகையால் இவன் விஷயத்தில் தஹனம் வரையில் தான் ஆசௌசமே தவிர உடனடியாக க்ரியைகளைச் செய்வதும் கூடாது. ஜ்ஞாதிகளும் உடனடியாக ஆசௌசம் அனுஷ்டிக்கவும் கூடாது. (73½)

**60. புத்திபூர்வம் அல்லாத துர்மரணத்தில் உடனே க்ரியைகளுக்கு தோஷம் இல்லாமை.**

**प्रमादाद् दुर्मृतौ सद्यः क्रियाशौचे समाचरेत् ॥ ७४ ॥**
**वधे प्रायादिमरणे त्र्यहं सद्यश्च तत्क्रियाः ।**

(வ்யா) புத்திபூர்வமாக வல்லாமல் ஜலம், நெருப்பு முதலியவைகளால் தற்செயலாக ஏற்பட்ட துர்மரணத்தில் உடனே க்ரியைகளையும் ஆசௌசத்தையும் அநுஷ்டிக்கலாம். சாஸ்த்ரத்தில் விதிக்கப்பட்ட ப்ராயோபவேசம் முதலிய மரணத்தில் மூன்றுநாட்கள் ஆசௌசமிருந்து அந்த

மூன்றுநாட்களில் ப்ரேதக்ரியைகளை உடனடியாகச் செய்ய வேண்டும். 'ப்ராயாதி' என்கிற ஆதிசப்தத்தினால், ஜல-அக்னி ப்ரவேசம் முதலியவைகள் க்ரஹிக்கப்படுகின்றன. அடியோடு அநுஷ்டானத்திற்கு சக்தியில்லாமல் அங்கங்களில் குறைவு ஏற்பட்டு சிகித்ஸை செய்யமுடியாத ரோகமுள்ளவர்கள் விஷயத்தில் - अग्निप्रवेशं जलप्रवेशं भृगुपतनं वा महापथगमनं वा गच्छेत्, न वृथा जीवितुमिच्छेत् [இப்படிப்பட்டவர்கள் வீணாகப் பிழைத்திருப்பதற்கு விரும்பக்கூடாதென்றும் நெருப்பிலே விழுந்தோ, ஜலத்திலே விழுந்தோ, பர்வதசிகரம் முதலியவற்றிலிருந்து விழுந்தோ மரணத்தை அடைய வேண்டும் என்று சாஸ்த்ரம் விதித்திருக்கிறது. பர்த்தா தேசாந்தரத்தில் மரணத்தை அடைந்தபோது பதிவ்ரதையான ஸ்த்ரீ அவனுடைய பாதுகைகளை மார்பில் வைத்துக் கொண்டு ச்ரத்தையுடன் அக்னி ப்ரவேசம் செய்யவேண்டும் என்றும், இவளுக்கு 'ஆத்மகாதம்' (தற்கொலை செய்து கொள்ளுதல்) என்கிற தோஷம் கிடையாது என்றும் சொல்லி இவள் விஷயத்திலும் மூன்று நாட்கள் ஆசௌசம் இருந்து க்ரியைகளைப் பண்ணவேண்டும் என்றும் சொல்லப்படுகிறது. அப்படியே, பெருமாளுடைய கார்யத்தை உத்தேசித்து மரணம் அடைந்தவனும் விஷ்ணு ஸாயுஜ்யத்தை அடைகிறானென்று சொல்லப்பட்டிருக்கிறது. இவர்கள் விஷயத்தில் மூன்று நாட்கள் ஆசௌசமும் க்ரியைகளும் உடனடியாக செய்யலாம். இவர்களுக்கு தோஷம் கிடையாது.

## 61. பாஷண்டாதிகளின் மரணத்தில் செய்யவேண்டியவை.

षण्डपाषण्डपतितप्रव्रज्यावासिमोघजाः ॥ ७५ ॥
स्वैरिण्यनाश्रमिस्तेनगर्भभर्त्रात्मघातिनः ।
नाशौचार्हास्तदा तूष्णीं दाह्याः पश्चात्तु मन्त्रतः ॥७६॥

(வ்யா) சாஸ்திரத்தில் சொல்லப்பட்ட காலங்களில், ஸ்நானம், தானம், ஹோமம், பித்ருதர்ப்பணம், தேவதாராதனம் இவைகள் இல்லாதவன், 'ஷண்டன்' என்றும், லிங்கச்

சேதம் பண்ணிக் கொண்டவன் 'ஷண்டன்' என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. வைதிக தர்மத்தை விட்டவனும், புருஷோத்தமனுன பகவானை மற்ற தேவதைகளோடு ஸமமாக எண்ணுபவனும் 'பாஷண்டி' என்று சொல்லப் படுகிருர்கள். வர்ணுச்ரமாசாரத்திலிருந்து நழுவியவன் 'பதிதன்'. ஸந்யாஸத்தை ஸ்வீகரித்து ஸந்யாஸ தர்மம் இல்லாதவன் 'ப்ரவ்ரஜ்யாவாஸி'. ஜ்ஞானம், ஆசாராநுஷ்டானம் இவைகளால் ஒரு பெருமையையும் ஸம்பாதிக்காமல் வீணுக இருப்பவன் 'மோகஜன்'. காமத்தினுல் அநேக பர்த்ரு பரிக்ரஹம் பண்ணினவள் 'ஸ்வைரிணீ'. பார்யை இறந்த பின்பு வேறு பார்யையை விவாஹம் செய்து கொண்டு க்ருஹஸ்தாச்ரமத்தையோ அல்லது வைராக்யத்தினுல் ஸந்யாஸாச்ரமத்தையோ ஏற்றுக்கொள்ள யோக்யதை இருக்கும்போது ஆச்ரம பரிக்ரஹம் பண்ணிக்கொள்ளாமலிருப்பவன் 'ஆ நா ச் ர மி', ஸ்வர்ணத்தைத் திருடியவன் 'ஸ்தேநன்', கர்ப்பத்தை அழிக்கிறவள் 'கர்ப்பகாதிநீ', பர்த்தாவைக் கொன்றவள் 'பர்த்ருகாதிநீ', தன்னை வதம் செய்து கொண்டவள் 'ஆத்மகாதிநீ', இவர்களுடையமரணத்தில் அப்போது அமந்த்ரகமாக ஸம்ஸ்காரம் செய்து அப்போது ஸ்நானமாத்ரமே செய்யவேண்டும். வேறு காலத்தில் மந்த்ரத்துடன் ஸம்ஸ்காரம் செய்து ஆசௌசம் அநுஷ்டிக்கக்கடவர்கள்.

### 62. துர்மரணத்தில் வேறுகாலத்தில் செய்ய வேண்டிய முறை.

**दुर्मृतौ वत्सरान्ते वा षण्मासान्ते त्र्यहात् क्रियाः ।**
**त्र्यहं चाघमिहावश्यं नारायणबलिर्भवेत् ॥ ७७ ॥**

(வ்யா) விஷம், தூக்குப்போட்டுக் கொள்ளுதல் முதலியவைகளால் புத்திபூர்வகமாக மரணமேற்பட்டால் இவர்களுக்கு, ஒருவருஷத்தின் முடிவிலோ, அல்லது ஆறு மாதங்கள் கழித்தோ தகுந்தபடி க்ருச்ச்ரங்களையும் நாராயண பலியையும் செய்து மூன்று நாட்களில் ஆசௌசத்தை அநுஷ்டித்து. மூன்று நாட்களில் க்ரியையைப் பண்ண வேண்டும்.

### 63. க்ருஹஸ்தாதி விஷயத்தில் மற்றவர்களுக்கு ஆசௌசம்.

**आद्योराश्रमिणोर्नाशे वर्णोक्तं त्वन्ययोर्मृतौ ।**
**सद्यःशौचं गृहिण्येवं सद्योऽन्येषु सदा मिथः ॥ ७८ ॥**

(வ்யா) ஸபிண்டர்களான-ப்ரம்ஹசாரி, க்ருஹஸ்தன் இவர்களுடைய மரணத்தில் க்ருஹஸ்தனுக்குத் தன்னுடைய ஜாதிக்குச் சொல்லப்பட்ட பூர்ண ஆசௌசம் உண்டு. வானப் ரஸ்தன், ஸந்ந்யாஸி இவர்களுடைய மரணத்தில் க்ருஹஸ் தனுக்கு ஸ்நானமாத்ரமே. ஆசௌசம் இல்லை. 'ப்ரம்ஹசாரி, வானப்ரஸ்தன், ஸந்ந்யாஸி' இவர்களுக்கு ஸபிண்டர்களான-பரஸ்பரம் மரணத்தில் ஸ்நாந மாத்ரமே. க்ருஹஸ்த மரணத் திலும் மற்றவர்களுக்கு ஸ்நாநமாத்ரமே. (78)

### 64. க்ருச்ச்ரம் முதலியவற்றில் உடனே சுத்தி. (ஸ்நாநமாத்ரம்)

**कृच्छ्रदेवोत्सवश्राद्धदानहोमतपोऽध्वरे ।**
**प्रारब्धे तत्प्रवृत्तानां सद्यःशौचमघागमे ॥ ७९ ॥**

(வ்யா) க்ருச்ச்ரம், சாந்த்ராயணம், தேவோத்ஸவம், (இது மனுஷ்யோத்ஸவத்துக்கும் உபலக்ஷணம் என்று த்ராவிடவ்யாக்க்யானம்) தானம்—மஹாதானம், அநேக தினங்களில் செய்ய வேண்டிய பதினாயிரம் ஹோமம், தபஸ்—பாபம் போவதற்காகவோ, ச்ரேயஸ்ஸுக்காகவோ அநேகநாட்கள் அநுஷ்டிக்க வேண்டிய நியமவிசேஷங்கள், யாகம் இவைகள் ஆரம்பிக்கப்பட்ட பிறகு இதில் ஸம்பந்தப் பட்டவர்களுக்கு நடுவில் ப்ரஸவத் தீட்டு வந்தால் தீட்டு கிடையாது. மரண ஸம்பந்தமான ஆசௌசம் ஸம்பவித்தால் ஸ்நானம் செய்து கர்மங்களைத் தொடரலாம். (**आरम्भो वरणं यज्ञे संकल्पो व्रतसत्रयोः । नान्दीमुखं विवाहादौ श्राद्धे पाकपरिक्रिया ॥** யாகத் தில் ரித்விக்குக்களின் வரணமும், வ்ரதம் ஸத்ரம் இவைகளில் ஸங்கல்பமும், விவாஹம் முதலியவைகளில் நாந்தீமுகமும்,

ச்ராத்தத்தில் பாக (தளிகை) க்ரியையும் ஆரம்பம் என்பது த்ராவிடவ்யாக்க்யானத்தில் கூறப்பட்டுள்ளது.) (79)

## 65. ச்ராத்தம் முதலியவற்றில் தீட்டுநேர்ந்தால்—

**श्राद्धोत्सवादौ भुक्त्यन्तः पाकादौ वाघसंभवे ।**
**परैर्देयं च भोक्तव्यं न दोष इति निश्चयः ॥ ८० ॥**

(வ்யா) ச்ராத்தத்திலும், நாமகரணசௌளாதி உத்ஸவ (கொண்டாட்ட)ங்களிலும், யஜ்ஞம், ஸஹஸ்ரபோஜனம், இவைகளிலும் தளிகையாரம்பித்த பிறகு போஜனத்தின் நடுவில் கர்த்தாவுக்கு ஆசௌசம் ஸம்பவித்தால ஆசௌசம் இல்லாத ஜனங்கள் பரிவேஷணம் பண்ணினால் வரிக்கப்பட்ட பிராம்ஹணர்கள் புஜிக்கலாம். ஒன்றும் தோஷம் கிடையாது. ஆசௌசம் உள்ளவர்கள் கர்த்தாவின் பாத்ரம் முதலியவைகளையும் போக்தாக்களின் பாத்ரம் முதலியவைகளையும் தொடக்கூடாது. ஆசௌசிகள் போஜனம் செய்பவர்களைப் பார்க்கக்கூடாது, என்றும் வ்யாக்க்யானத்தில் கூறப்பட்டுள்ளது.) (80)

**यज्ञोत्सवादौ सर्वत्र प्राक् प्रक्लृप्तेषु नास्त्यघम् ॥**

(வ்யா) யஜ்ஞமோ, உத்ஸவமோ, ச்ராத்தமோ ஆரம்பிக்கப்படும் முன்பு ஜ்ஞாதிகள் முதலியவர்களின் மூலமாக ஆசௌசம் வருமோவென்று எதிர்பார்த்து முன்பே, இது தேவதைகளுக்காக, இது பித்ருக்களுக்காக, இது ப்ராஹ்மணர்களுக்காகவென்று உத்தேசிக்கப்பட்ட வஸ்துக்களுக்கு ஆசௌசம் கிடையாது. இப்படி ஸங்கல்பித்து வைக்கப்பட்ட வஸ்துக்களைக் கொடுக்கலாம், வாங்கவும் செய்யலாம், இதற்கு தோஷம் கிடையாது. (இதனால் ச்ராத்தம் முதலியவற்றில் பாகம் முதலியவைகளுக்கு முன்பு ஆசௌசம் ஸம்பவித்தாலும், பக்வமான அன்னம் தவிர மற்றவைகளான முன்பு ஸங்கல்பித்து வைத்த த்ரவ்யங்களைக் கொடுத்தால் தோஷம் இல்லை என்பது ஸித்தித்தது.) (80½)

### 66. க்ரஹணம் முதலிய விஷயத்தில் ஸ்நாநத்திஞல் உடன் சுத்தி.

**दानादौ ग्रहणे सद्यः पुत्रजन्मनि (चापदि) चावृति ॥८१**

**निष्कृतौ तीर्थयात्रायां वेदपारायणे व्रते ।**
**नामकर्मादिसंस्कारे प्रारब्धे सद्य इष्यते ॥ ८२ ॥**

(வ்யா) ஆசௌசத்தின் நடுவில் சந்த்ரஸூர்ய க்ரஹணங்கள் ஸம்பவித்தால் க்ரஹணம் விடுவதற்குள், பித்ரு தர்ப்பணம், தானம், ஜபம், ஹோமம் முதலியவைகளில் ஸ்நாநமாத்ரத்திஞல் சுத்தி உண்டு. அம்மாதிரியே புத்ரன் ஜனித்தபோது ஜாதகர்மத்தில் ஸ்நாநத்திஞல் சுத்தி உண்டு. (இங்குத் தெலுங்கு லிபியில் 'पुत्रजन्मनि चापदि' என்றே மூலத்திலும் ஸம்ஸ்க்ருத வ்யாக்க்யானத்திலும் காணப்படுகிறது. த்ராவிடவ்யாக்க்யானத்தில் 'पुत्रजन्मनि चावृति' என்று மூலபாடமும், आवृत् என்று ஜாதகர்மத்திற்குப் பெயர் என்றும் உள்ளது.) ப்ராயச்சித்தம், தீர்த்தயாத்ரை, வேதபாராயணம், ஏகாதசீவ்ரதம், நாமகர்மம் முதலிய வைதிகஸம்ஸ்காரங்களிலும், ஆரம்பிக்கப்பட்டு நடுவில் ஆசௌசம் வந்தால் ஸ்நாநமாத்ரத்திஞல் சுத்தி உண்டு. (இங்கு வேதபாராயணம் என்பது சாப்பிடாமல் ஸங்கல்பித்துக் கொண்டு நடுவில் விடாமலும், வார்த்தை சொல்லாமலும் பிராயச்சித்தமாகச் செய்யும் வேதபாரயணத்தைக் குறிக்கிறது.) (82)

### 67. தாஸி தாஸாதிகளுக்கு ஆசௌசத்தின் முறை.

**दासीदासनृपामात्यकारवः शिल्पिनो भिषक् ।**
**स्वस्वकृत्ये सदा शुद्धाः शुद्धा नैवान्यकर्मसु ॥ ८३ ॥**

(வ்யா) வேலைக்காரி (தேவதாஸி), வேலைக்காரன் (அடியாள்), ராஜா, ராஜப்ருத்யர்கள், 'வண்ணான், நாபிதன் முதலியவர்களான காருக்கள், தச்சன் முதலிய சில்பிகள்,

வைத்யன் இவர்கள் தங்களால் ஆகக் கூடிய கர்மங்களில் ஆசௌசத்திலும் சுத்தர் ஆவார்கள். பிறர்களால் செய்யக் கூடிய கர்மங்களில் சுத்தர்கள் ஆகமாட்டார்கள். (83)

## 68. ஆசௌசம் உள்ளவன் தவிர்க்க வேண்டியவை.

**न विशेद्देवतागारं न कुर्याद्वन्दनाद्यघी ।**

(வ்யா) ஜனனமரணநிமித்தமான ஆசௌசம் உள்ளவன் தேவாலயத்தில் ப்ரவேசிக்கக் கூடாது. ப்ரணாயாமம் ப்ரதக்ஷிணம் முதலியவைகளையும் செய்யக் கூடாது. இங்கு ஆதிசப்தத்தால் புஷ்பம் கொணர்தல், பூஜாத்ரவ்யங்களைத் தொடுதல் முதலியவையும் கூடாதென்று சொல்லப்படுகிறது. தாஸதாஸீக்களுக்குத் தன்னுடைய தொழிலில் சுத்தியைச் சொல்லியிருப்பதனால் தேவதாஸி முதலானவர்களுக்கு தேவாலயத்தில் தன்னுடைய தொழிலைச் செய்யலாம் என்கிற ப்ரஸக்தி ஏற்படுமாகையால் அதுவும் கூடாதென்று சொல்லுவதற்காகவும் தேவாலயப்ரவேசநிஷேதம் இங்குச் சொல்லப்படுகிறது.

(ஆசௌசம் உள்ளவன் மற்றவரை ப்ரணாமம் செய்வதும் கூடாது. தீட்டுள்ளவர்களையும் மற்றவர்கள் ஸேவிப்பதோ அபிவாதனம் செய்வதோ, ப்ரத்யபிவாதனம் செய்வதோ கூடாது. ஜல பாத்திரத்தை வைத்துக் கொண்டோ புஷ்பத்தைக் கையில் வைத்துக் கொண்டோ ஆசௌசத்துடனோ அபிவாதனம் செய்யக் கூடாதென்றும் சொல்லப்பட்டுள்ளது.) (இங்கு வந்தனம் கூடாதென்று சொன்னது காயிகமான விஷயம். மானஸமானவந்தனத்திற்கு தோஷம் இல்லை என்று வ்யாக்யானத்தில் கூறப்பட்டுள்ளது.)

(83½)

## 69. நிர்ஹரணம் [வஹனம் முதலியவற்றைச்] செய்தால் அசுத்தியும் செய்ய வேண்டியவையும்.

**दशाहं सोदकज्ञात्योस्त्रिरात्रं योनिबन्धुषु ॥ ८४ ॥**
**विजातिषु शवोक्तं स्यात् प्रेतनिर्हरणे कृते ।**

(வ்யா) 'நிர்ஹரணம்' என்பது ப்ரேதத்திற்கு ஸ்நாநம் பண்ணிவைப்பது, வஸ்த்ரம் முதலியவைகளால் அலங்கரிப்பது, வஹிப்பது, தஹனம் செய்வது இவைகள். ஸமாநோதகனோ ஸபிண்டரான ஜ்ஞாதியோ இந்தநிர்ஹரணங்களைச் செய்தால் அவனுக்குப் பத்து நாட்கள் ஆசௌசம் உண்டு. (ஸமாநோதகன் மூன்று நாட்கள் ஆசௌசம் உள்ளவன். அவனுக்கு நிர்ஹரணத்தின் நிமித்தமாக அதிக ஆசௌசம் சொல்லப்படுகிறது. ஸபிண்டன் நிர்ஹரணம் செய்யாமலிருந்தாலும் அவனுக்குப் பத்து நாட்கள் ஆசௌசம் உண்டாகையால் அவனுக்கு நிர்ஹரணநிமித்தமாக இந்த ஆசௌசம் சொன்னதற்குக் காரணம் அநுபந்தனை நிர்ஹரணம் செய்தால் பத்து நாட்கள் ஆசௌசம் ஸித்திப்பதற்காக என்று வ்யாக்யானத்தில் சொல்லப்பட்டுள்ளது.] யோநிபந்துக்களான பக்ஷிண்யாசௌசம் உள்ளவர்கள் நிர்ஹரணத்தைப்பண்ணினால் மூன்று நாட்கள் அவர்களுக்கு ஆசௌசம். வேறு ஜாதிசவத்திற்கு ஸ்நேஹம் முதலிய காரணத்தினால் நிர்ஹரணம் செய்தால் சவஜாதிக்குள்ள ஆசௌசம் உண்டு. (84½)

**यः प्रमीतमलंकुर्याद्वहेद्वा प्रदहेद् द्विजम् ॥ ८५ ॥**
**स शुद्ध्यत्येककालेन कालशेषं बहिर्वसन् ।**
**ग्रामे वसन् विनाच्छुद्ध्येत् त्र्यहात्प्रेतगृहे वसन् ॥८६॥**
**निर्हृत्य यो मृतान्नं च भुङ्क्ते स तु दशाहतः ।**

(வ்யா) பந்துவல்லாத ஒருவன் மரணமடைந்த பிராஹ்மணனை அலங்கரித்தாலோ, வஹனம் செய்தாலோ, அவனுக்கு ஒருகாலம் ஆசௌசம் உண்டு, பகலிலேயானால் பகல் முழுவதும், ராத்ரியிலானால் ராத்ரி முழுவதுமாகவும் ஆசௌசம் என்றபடி. இவன் க்ராமத்திற்கு வெளியில் அந்த ஒருகாலம் வஸித்தால் தான் ஒருகாலம் ஆசௌசம். கிராமத்தில் வஸித்தால் ஒரு நாள் ஆசௌசம். மரணமடைந்த வீட்டிலே வஸித்தானானால் மூன்று நாட்கள் ஆசௌசம். இந்த அலங்காராதிகளைச் செய்தவன் மரணமடைந்தவனுடைய அன்னத்தை புஜித்தால் எங்கு வஸித்தாலும் பத்து நாட்கள் ஆசௌசம் உண்டு. ['त्रिरात्रं योनिबन्धुषु' என்றும், 'त्र्यहात्प्रेतगृहे वसन्' என்றும் சொல்லப்பட்ட மூன்று நாட்கள் ஆசௌசிகள் போஜனம் செய்யும் பக்ஷத்தில் பத்து நாட்கள் ஆசௌசமும். சாந்த்ராயணமும் அநுஷ்டிக்கவேண்டும் என்று 'து' என்கிற சப்தத்தின் அர்த்தம் என்று வ்யாக்க்யானத்தில் சொல்லப்பட்டுள்ளது.]

[இப்படி நிர்ஹரணத்தை நிமித்தமாகக் கொண்டு மூன்று நாட்கள் ஆசௌசம், ஒரு நாள் ஆசௌசம் என்று விதித்திருக்கிறபடியால் நிர்ஹரணம் இல்லாமல் அந்த க்ருஹத்தில் வஸிப்பவனாயிருந்தாலும் பந்து அல்லாதவனுக்கு ஆசௌசம் இல்லை. நிர்ஹரணம் செய்து விட்டு வேறு க்ருஹத்தில் வஸிப்பவனுக்கு ஒரு நாள் ஆசௌசம் சொன்னது அச்ரோத்ரியன் விஷயத்தில் தான். ச்ரோத்ரியன் விஷயத்தில் க்ராமத்தில் வஸிக்கும் எல்லோருக்குமே ஒரு நாள் ஆசௌசம் முன்பு விதிக்கப்பட்டது. இப்படி க்ராமத்திற்கு வெளியில் வாஸம் முதலியவை ஜ்ஞாதிகளுக்கு இல்லை என்றும் வ்யாக்க்யானத்தில் சொல்லப்பட்டுள்ளது.] (86½)

### 70. அநாதர்கள் விஷயத்தில் ஸ்நாநமாத்ரம்.

**यतीन्द्रानाथनिर्हारे सद्यः शुद्धिर्महत् फलम् ॥ ८७ ॥**

(வ்யா) யதீந்த்ரர்கள், அநாதர்கள் (பத்நீ புத்ர பந்து ஹீநர்கள்) இப்படிப்பட்டவர்களுக்கு நிர்ஹரணத்தைச் செய்பவர்களுக்கு ஸ்நாநமாத்ரத்தாலே சுத்தி. எந்த விதமான தோஷமும் இல்லை. உயர்ந்த யஜ்ஞத்தின் பலனும் உண்டு. (இங்கு ப்ரயோகிக்கப்பட்ட யதீந்த்ர சப்தம் ப்ரஹ்ம வித்தைச் சொல்லுகிறது என்று த்ராவிடவ்யாக்யை) (87)

## 71. தனலாபத்திற்காக நிர்ஹரணத்தைச் செய்தால்-

**दृष्टार्थं प्रेतनिर्हारे ज्ञातिभ्यो द्विगुणं त्वघम् ।**
**विजातीनां, सजातेस्तु जात्युक्तमिति गौतमः ॥ ८८ ॥**

(வ்யா) தனலாபத்தை உத்தேசித்து ப்ரேதநிர்ஹரணம் பண்ணினுல் வேறு ஜாதியைச் சேர்ந்தவர்களுக்கு மரணம் அடைந்தவனுடைய ஜ்ஞாதிகளைக் காட்டிலும் இரண்டு மடங்கு ஆசௌசம் உண்டு. ஸமாநமான ஜாதியைச் சேர்ந்தவர்களுக்கு அந்த ஜாதிக்குச் சொல்லப்பட்ட ஆசௌசம். (88)

## 72. அநுகமனுதி விஷயத்தில் அசுத்தி.

**शवानुगमने रोदे कर्मण्यो नहि तद्दिने ।**

(வ்யா) சவத்தைப் பின் தொடர்ந்தாலும், ஸ்நேஹாதிகளால் அழுதல், உபசாரம் சொல்லுதல் இவற்றைச் செய்தாலும் அன்றைய தினம், ச்ராத்தம், ஹோமம், ஜபம், பகவதாராதனம் முதலிய கர்மாக்களைச் செய்ய அர்ஹதையற்றவனுவான் (இது உபலக்ஷணம் - ஆசௌசம் போகும்படியான விதிகளைச் செய்யாவிடிலும் ஷி கர்மாக்களுக்கு அநர்ஹனுவான். அதாவது ஸூதகம், சாவம் இவைகளில் 10-வது தினத்தில் க்ஷௌரம் செய்து கொள்ளாவிடில்

கேசங்களில் ஆசௌசம் உள்ளடங்கியிருக்கும் என்றும் சொல்லப்படுவதால் க்ஷௌரம் பண்ணிக் கொள்ளும் வரை ஷை கர்மாக்களுக்கு அர்ஹதை இல்லை என்று வ்யாக்க்யானத்தில் கூறப்பட்டுள்ளது.) (88½)

### 73. ப்ரஹ்மசாரிக்கு சுத்தி முதலியவை.

प्रेतकृत्ये तु तत्कालमशुद्धोऽथाप्लुतः शुचिः ॥ ८९ ॥
तस्याशौचेऽन्नपानादौ दशाहमशुचिर्व्रती ।

(வ்யா) மாதா, பிதா, மாதாமஹன் முதலியவர்களுக்கு ப்ரஹ்மசாரி, முக்கியகர்த்தாவாக இருந்து ப்ரேதக்ருத்யத்தைச் செய்தால் அந்த க்ருத்யம் செய்யும் வரை அவனுக்கு அசுத்தி உண்டு. உடன் ஸ்நாநம் செய்தால் சுத்தனுவான். இவன் ஆசௌசியின் க்ருஹத்தில் புஜிப்பதோ, ஆசௌசிகளோடு கூட வஸிப்பதோ கூடாது. இவற்றைச் செய்தால் பத்து தினங்களும் ஆசௌசம் உள்ளவனுவான்.

[அதோடு புநருபநயனத்திற்கு அர்ஹனுவானென்றும் வ்யாக்க்யானத்தில் கூறப்பட்டது.] ஆசௌசம் இல்லாத இடத்தில் போஜனத்தைச் செய்யவேண்டும். மாதா பிதாக்கள் தவிர (மாதாமஹன், மாதுலன் முதலியவர்களுக்கும் இது உபலக்ஷணம்.) மற்றவர்களுக்கு தஹனம் முதல் ஸபிண்டீகரணம் வரை செய்தாலும் புநருபநயனம் உண்டு. என்றும் சொல்லப்பட்டுள்ளது.] (89)

### 74. சவானுகமனம் செய்தவர்களுக்கு சுத்திக்ரமம்.

स्नानाग्निस्पर्शनाज्याशपुनस्स्नानासुसंयमैः ॥ ९० ॥
द्विजातयो विशुद्ध्यन्ति सजातीयशवानुगाः ।

(வ்யா) ப்ராஹ்மண - க்ஷத்ரிய - வைச்யர்கள் தன் ஜாதியான சவத்தைப் பின் தொடர்ந்து சென்றால், ஸ்நாநம் செய்து, அக்னியைத்தொட்டு, நெய்யை உட்கொண்டு, மறுபடியும் ஸ்நாநம்செய்து,மூன்று ப்ராணாயாமங்களைச் செய்து சுத்தியடைவார்கள். (அக்னி கிடைக்காவிடிலோ நெய் கிடைக்காவிடிலோ ஸசேலமாக ஸ்நாநம் செய்து காயத்ரி ஜபித்த தீர்த்தத்தைப் பானம் செய்து சுத்தியையடைவார்கள் என்று வ்யாக்க்யானம்.) (இங்கு சவாநுகமனத்திற்கு ப்ராயச்சித்தம் சொல்வதால், முன் செல்வதும் பக்கத்தில் செல்வதும் கூடாதென்று சொல்லப்பட்டதாகிறது என்று வ்யாக்க்யானம்.) (90½)

त्र्यहं शूद्रानुगे विप्रे द्व्यहं विड्नृपयोस्ततः ॥ ९१ ॥
नदीस्नानं च गायत्र्याः सहस्रं साष्टकं जपः ।

(வ்யா) ப்ராஹ்மணன் சூத்ரசவத்தைப் பின்தொடர்ந்து சென்றால், மூன்று நாட்கள் ஆசௌசம். க்ஷத்ரியன், வைச்யன் இவர்கள் சூத்ரசவத்திற்குப் பின்னால் சென்றால் இரண்டு நாட்கள் ஆசௌசமும் இருக்க வேண்டும். இப்படி ஆசௌசம் அனுஷ்டித்த பின்பு ஸமுத்ரத்தை அடைகிற நதியில் ஸ்நாநம் செய்து 1008 தடவைகள் காயத்ரீ ஜபமும் செய்ய வேண்டும். (புத்தி பூர்வமாக அநுகமனத்தைச் செய்தால் இந்த ப்ராயச்சித்தம், அல்லது ஸமுத்ரகாமிநதீஸ்நாநம் செய்து, 100 ப்ராணாயாமங்களைச் செய்து, நெய்யை உட்கொண்டு சுத்தியை அடைவார்கள். புத்தி பூர்வமாக அல்லாமல் தற்செயலாக அநுகமனம் (பின் தொடர்தல்) செய்ய நேர்ந்தால் பிராஹ்மணன் 1008 காயத்ரீ ஜபமும், க்ஷத்ரியன் 500 காயத்ரீ ஜபமும், வைச்யன் 250 காயத்ரீ ஜபமும் செய்ய வேண்டும் என்று சொல்லப்பட்டுள்ளது.] (91½)

**द्विजप्रेतानुगः शूद्रः शुद्ध्येत् स्नानेन, विण्नृपौ ।। ९२ ।।**
**स्वाग्र्यप्रेतानुगौ स्नानवह्निस्पर्शाज्यपानतः ।**

(வ்யா) சூத்ரன், பிராஹ்மண க்ஷத்ரிய வைச்யசவாநுகமனம் (பின் செல்லுதல்) செய்தால் ஸ்நாநமாத்ரத்தினல் சுத்தனுவான். க்ஷத்ரியன், பிராஹ்மணசவாநுகமனம் பண்ணினலும், வைச்யன், பிராஹ்மண க்ஷத்ரியசவாநுகமனம் பண்ணினலும், ஸ்நாநம் செய்து அக்னியை ஸ்பர்சித்து நெய்யை உட்கொண்டு (புநஸ்ஸ்நாநமும் செய்து) சுத்தியையடைவார்கள். (92½)

**ब्राह्मणस्य तु विड्भूपप्रेतानुगमने सति ।। ९३ ।।**
**पक्षिण्यहर्नदीस्नानं गायत्र्यष्टशतं जपः ।**

(வ்யா) ப்ராஹ்மணன் க்ஷத்ரிய சவாநுகமனம் பண்ணினல் ஒருநாளும், வைச்யசவாநுகமனம் பண்ணினல் பக்ஷிணீ (90 நாழிகை) ஆசௌசமும் அநுஷ்டித்து ஸமுத்ரகாமினியான நதியில் ஸ்நாநம் செய்து 108 தடவை காயத்ரீ ஜபமும் செய்யவேண்டும். (இம்மாதிரியே க்ஷத்ரியன் அடுத்த வைச்யசவாநுகமனம் பண்ணினல் ஒருநாளும், சூத்ரசவாநுகமனம் பண்ணினல் பக்ஷிணீ (90 நாழிகை) யும் ஆசௌசம் அநுஷ்டிக்க வேண்டும். வைச்யன் சூத்ரசவாநுகமனம் பண்ணினல் ஒருநாள் ஆசௌசம்.) (93½)

**शूद्रप्रेतानुगे शूद्रे शवस्पृश्यहरन्यथा ।। ९४ ।।**
**एककालस्तथा रोदे स्नानमेवास्थिसंचिते ।**

(வ்யா) சூத்ரன், சூத்ரசவத்தைத்தொட்டு, அநுகமனம் (பின் செல்லுதல்), செய்தால் ஒருநாள் ஆசௌசம், சவ-

ஸ்பர்சம் இல்லாமல் அநுகமனம் செய்தால் ஒரு காலம், அதாவது பகலிலானால் பகல்மாத்ரமும், ராத்ரியிலானால் ராத்ரிமாத்ரமும் ஆசௌசம். இம்மாதிரியே சவஸ்பர்சத்துடன் அழுதல்' உபசாரம் சொல்லுதல் செய்தால் ஒருநாளும், சவஸ்பர்சம் இல்லாமல் அழுதல் உபசாரம் சொல்லுதலைச் செய்தால் பகல், அல்லது ராத்ரி என்கிற ஒரு காலமும் ஆசௌசம் உண்டு. இது ஸஞ்சயனத்திற்கு முன்பாக இருந்தால். ஸஞ்சயனத்திற்குப் பின்பு உபசாரம் சொல்லுதலைச் செய்தால் ஸ்நான மாத்ரம்தான். ஆசௌசம் இல்லை. (94½)

**स्नानं सवर्णरोदेऽस्थि संचिते नृपवैश्ययोः ॥ ९५ ॥**

**असंचिते सचेलं तद् विप्रस्याचमनाप्लवौ ।**

(வ்யா) க்ஷத்ரிய வைச்யர்கள், தங்களுக்கு ஸமாந ஜாதியின் விஷயத்தில் ஸஞ்சயனத்திற்குப் பின் உபசாரம் சொன்னால், ஸ்நாநமும், ஸஞ்சயனத்திற்கு முன்பு சொன்னால் ஸசேலஸ்நாநமும் செய்யவேண்டும். பிராஹ்மணன் தனக்கு ஸவர்ணமான பிராஹ்மண விஷயத்தில் ஸஞ்சயனத்திற்குப் பின்பு உபசாரம் சொன்னால் ஆசமநமாத்ரமும், ஸஞ்சயனத்திற்கு முன்பு உபசாரம் சொன்னால் ஸ்நாநமும், செய்ய வேண்டும். (95½)

**75. ஸஞ்சயனத்திற்கு முன்பும் – பின்பும் உபசாரம் சொல்லும் விஷயத்தில்.**

**निकृष्टेष्वाप्लवाचामौ वर्णाग्र्येषु विनाप्लवौ ॥ ९६ ॥**

**प्राक् पश्चावस्थिचयनादातुरव्यञ्जने मिथः ।**

(வ்யா) க்ஷத்ரிய வைச்யர்கள், பிராஹ்மணவிஷயத்திலோ, வைச்யன் பிராஹ்மணக்ஷத்ரியர்கள் விஷயத்திலோ

ஸஞ்சயனத்திற்கு முன் உபசாரம் சொன்னால் ஸ்நானமும், ஸஞ்சயனத்திற்கு பின்பு இதைச் செய்தால் ஆசமநமும் செய்யவேண்டும். ப்ராஹ்மணன், க்ஷத்ரிய வைச்யர்கள் விஷயத்திலோ, க்ஷத்ரியன், வைச்யர் விஷயத்திலோ ஸஞ்ச யனத்திற்கு முன்பு உபசாரம் சொன்னால் ஒருநாள் ஆசௌச மும், ஸஞ்சயனத்திற்குப் பின்பானால் ஸ்நானமும் செய்ய வேண்டும். (96½)

**अकृतेऽस्थिचये शूद्रावातुरव्यञ्जने कृते ॥ ९७ ॥**

**द्व्यहं नृपे त्र्यहं विप्रे दिनं सर्वेषु संचिते ।**

(வ்யா) இங்கு ந்ருபசப்தம் வைச்யனுக்கும் உபலக்ஷ ணம். க்ஷத்ரிய வைச்யர்கள் மரணமடைந்த சூத்ரன் நிமித்தமாக ஸஞ்சயனத்திற்கு முன்பு உபசாரம் சொன்னால் அவர்களுக்கு இரண்டு நாட்கள் ஆசௌசம் ப்ராஹ் மணன் இதைச் செய்தால் மூன்று நாட்கள் ஆசௌசம். ஸஞ்சயனத்திற்குப் பின்பு உபசாரம் சொன்னால் இவர்கள் எல்லாருக்கும் ஒருநாள் ஆசௌசம்.

(இங்கு சூத்ர விஷயத்தில் விசேஷித்து விதிக்கையாலே பூர்வ ச்லோகத்திலே நிக்ருஷ்ட சப்தம் 'க்ஷத்ரிய வைச்ய விஷயம் என்று கண்டு கொள்வது' என்று த்ராவிட வ்யாக் க்யானம்.) (97½)

### 76. அஸ்தியின் ஸ்பர்சவிஷயத்தில்—

**स्पृष्टे मर्त्यास्थ्नि तु स्निग्धे त्रिरात्रं नीरसे दिनम् ॥९८**

**अमत्या त्वाप्लवाचामौ स्नानं स्निग्धेऽस्थ्न्यमक्ष्यजे ।**

(வ்யா) ரக்தம் - மாம்ஸம் இவைகளுடன் கூடிய மனிதனுடைய எலும்பை ஒருவன் புத்தி பூர்வமாக ஸ்பர்

சித்தால் மூன்று நாட்கள் ஆசௌசமும், உலர்ந்த எலும்மை ஸ்பர்சித்தால் ஒருநாள் ஆசௌசம் உண்டு. புத்தி பூர்வமாக இல்லாமல் தற்செயலாக ஸ்பர்சம் நேர்ந்தால் ஈரமான எலும்பு விஷயத்தில் ஸ்நாநமும், உலர்ந்ததை ஸ்பர்சிக்க நேர்ந்தால் ஆசமநமும் செய்ய வேண்டும். ஐந்து நகங்களுள்ள ஐந்து பிராணிகளுடைய மாம்ஸத்தைச் சாப்பிடலாம் என்று சாஸ்த்ரம் கூறுகிறது. அவை 'शल्यकः श्वाविधो गोधा शशः कूर्मश्च पञ्चमः' காட்டுப்பன்றி, முள்ளம்பன்றி, உடும்பு, முயல், ஆமை, என்பவை. இவைகளைத்தவிர மற்றவைகளின் ஈரமான எலும்பை ஸ்பர்சித்தால் ஸ்நாநமும்,உலர்ந்ததை ஸ்பர்சித்தால் ஆசமனமும் உண்டு. [இது ப்ராஹ்மணனுக்கு என்று வ்யாக்யானத்தில் எடுத்திருக்கும் வசநத்தினால் ஏற்படுகிறது] (98½)

## 77. குரு—லகு ஆசௌசங்களுக்கு வ்யவஸ்தை—

**गुर्वादौ सोदके स्रावे मातृबन्धौ वयस्यघम् ॥ ९९ ॥**
**सर्ववर्णसमं ह्येति विज्ञानेश्वरघोषितम् ।**

(வ்யா) ஆசார்யன், ரித்விக், உபாத்யாயன் முதலியவர்கள் விஷயத்திலும், ஸமானோதகன் விஷயத்திலும், கர்பஸ்ராவ விஷயத்திலும், மாத்ருபந்துக்களான மாதுலமாதாமஹாதி விஷயத்திலும், வயஸ் நிமித்தமாக (आदन्तजन्मनः सद्यः என்பது முதலானதுமான) ஆசௌசம் கீழ்ச் சொல்லப்பட்டவை எல்லாம் எல்லாவர்ணத்திற்கும் ஸமம் என்று விஜ்ஞானேச்வரரால் ப்ரமாணங்களைக் கொண்டு நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. [பூர்ணமான ஆசௌசங்களில் தான் தாரதம்யமே தவிர இவைகளில் பேதம் இல்லை என்றபடி.] (99½)

**स्मृतिद्वये परोक्षेऽल्पं प्रत्यक्षे गुर्विति स्थितिः ॥१००॥**

(வ்யா) ஒரே விஷயத்தில் ஸ்ம்ருதிகளில் அல்பகாலா சௌசமும் அதிககாலாசௌசமும் சொல்லப்பட்டிருந்தால் ப்ரத்யக்ஷத்தில் (ஸமீபத்தில்) அதிககாலாசௌசமும், பரோக்ஷத்தில் (தூரத்தில்) அல்பகாலாசௌசமும் என்கிற வ்யவஸ்தையை அறிய வேண்டும். அதெப்படி எனில்:—
(100)

**यथा हि योनिसंबन्धेष्वर्हविधिरसंनिधौ ।**
**याज्यादौ श्वशुरादौ च शिष्यादौ पक्षिणीविधिः ॥१०१**

(வ்யா) பக்ஷிண்யாசௌசத்திற்கு அர்ஹர்களாகச் சொல்லப்பட்ட, அத்தான் அம்மாஞ்சி முதலியவர்கள் விஷயத்தில் ஒரு நாள் ஆசௌசம் சில ஸ்ம்ருதிகளில் சொல்லப் பட்டது பரோக்ஷத்தில் என்றும், யாகம் செய்யும் யஜமானன், ரித்விக், மாமனார், மாதுலன், சிஷ்யன் குரு முதலிய மூன்று நாட்கள் ஆசௌசம் சொல்லப்பட்டவர்கள் விஷயத்தில் பக்ஷிண்யாசௌசம் சொல்லும் வசனம் பரோக்ஷத்தில் என் றும் வ்யவஸ்தை என்றபடி. (101)

**78. ஆசௌசத்தின் முடிவில் செய்யவேண்டியவை—**

**अघान्ते संगवे स्नात्वा विप्रः स्पृष्ट्वाम्बु शुद्ध्यति ।**
**नृपादिर्वाहनादीनि नान्यथेत्यब्रवीन्मनुः ॥ १०२ ॥**

(வ்யா) ஆசௌசத்தின் முடிவில் அதாவது மறு நாளில் காலை 6 நாழிகைகளுக்கு மேல் ஸ்நாநம் செய்து ப்ராஹ்மணன் ஜலத்தைத் தொட்டால் சுத்தனுவான். க்ஷத்ரியன் வாஹனத்தையும், வைச்யன் சாட்டையையும், சூத்ரன் தடியையும் தொட்டுச் சுத்தியை அடைவான் என்று மநு சொன்னார். (102)

**एकत्र सुखबोधार्थं सुसमीक्ष्य बहुस्मृतीः ।**
**कृतोऽघनिर्णयः स्पष्टं गृह्यतां तद्बुभुत्सुभिः ॥ १०३ ॥**

(வ்யா) பல ஸ்ம்ருதிகளில் பல விடங்களில் சொல்லப் பட்ட விஷயங்களை நன்ருகப் பராமர்சித்துத் திரட்டி ஒரே இடத்தில் ஸங்கமாக அறிந்துகொள்வதற்காக அகநிர்ணயம் என்கிற க்ரந்தம் ஸ்பஷ்டமாகச் செய்யப்பட்டது. ஆகையால் ஆசௌசத்தின் தத்த்வத்தை அறிய விரும்புபவர்கள் ஸந்தேஹம் இன்றி இதை ஏற்றுக்கொள்ள வேண்டும். (103)

**हारीतो वेङ्कटेशार्यः श्रुतिस्मृतिविचक्षणः ।**
**व्यक्तं श्लोकशतेनेत्थमकरोदघनिर्णयम् ॥ १०४ ॥**

इति श्रीहारीतकुलतिलकस्य सरस्वतीवल्लभार्यपौत्रस्य श्रीरङ्गनाथ-
सूरिसुतस्य श्रीवेङ्कटेशस्य वैदिकसार्वभौमस्य कृतिषु
आशौचशतकं सम्पूर्णम् ॥

(வ்யா) ஹாரீத குலத்தில் பிறந்தவராய் ச்ருதிஸ்ம்ருதிகளின் அர்த்தத்தை நிர்ணயிப்பதில் ஸமர்த்தருமான ஸ்ரீ வேங்கடேசாசார்யர்-(ஸ்ரீதோழப்பர் என்கிற வைதிக ஸார்வபௌமர்) இப்படி நூறு ச்லோகங்களினுல் 'அகநிர்ணயம்' என்கிற திட்டை நிர்ணயிக்கும் க்ரந்தத்தை வ்யக்தமாக இயற்றினுர். (104)

ஆசௌச சதகம் முற்றிற்று

श्रीमद्रङ्गशठारातिसंयमीन्द्रप्रसादतः ।
नैध्रुवो नरसिंहार्यो व्यवृणोदघनिर्णयम् ॥

शुभमस्तु

மஹாவித்வான், வ்யாகரண வேதாந்த விசாரத-தர்மசாஸ்த்ர ப்ரவீண, ஸ்ரீ உ. வே. மேல்பாக்கம் நரஸிம்ஹாசார்ய ஸ்வாமி இயற்றிய ஆசௌசசதக வ்யாக்யானம் முற்றிற்று.

# आशौचशतकश्लोकानाम् अकारादिक्रमः

# அநுபந்தம்

1) ஆசௌசசதகம் 12-வது ச்லோகத்தில் 'जीवच्छ्राद्धे भवेत् स्वस्य दशाहं नेतरेष्वघम्' என்றுள்ளது. ஒருவன் ஜீவச்ச்ராத்தம் செய்தால் அப்போது அவனுக்கு மாத்ரம் 10 நாட்கள் ஆசௌசமே தவிர அவனுடைய ஜ்ஞாதிகளுக்குக் கிடையாது என்று இதின் அர்த்தம்.

இதை விவரிக்கும் வைதிகஸார்வபௌமர் இயற்றிய ஸம்ஸ்க்ருத வ்யாக்யானத்தில் 'आपन्ना स्त्री पुरुषश्च जीवन्नेवात्मश्राद्धं कुर्यात्, 'आत्मनोऽपि जलं दद्यात्' इति शास्त्रविहिते जीवच्छ्राद्धे स्वस्यैव दशाहम्, नान्येषु ज्ञातिषु किंचिदप्यघं भवति । तथा कण्वबोधायनौ— 'तत्राशौचं दशाहं स्यात्स्वस्य, ज्ञातेर्न विद्यते ॥ इति ॥' என்றிருக்கிறது. ஆபத்தை அடைந்த ஸ்த்ரீயோ புருஷனோ நான் ஜீவித்திருக்கும் போதே தனக்கு ச்ராத்தம் செய்து கொள்ளலாம்' என்று இப்படி சாஸ்த்ரத்தில் விதிக்கப்பட்ட ஜீவச்ச்ராத்தத்தில் தனக்கு மட்டுமே பத்துதினங்கள் ஆசௌசம். ஜ்ஞாதிகளுக்குக் கிடையாதென்று, இதற்கு ப்ரமாணமாக கண்வபோதாயந வசநம் மேற்கோளாகக் காட்டப்பட்டிருக்கிறது.

இதன் மணிப்ரவாளவ்யாக்யானத்தில்:— 'அபுத்ரன் தானே கயாதிபுண்யக்ஷேத்ரங்களிலே ஜீவச்ச்ராத்தம் பண்ணிக்கொள்ளக் கடவன் என்றும், ஸந்யாஸோத்யுக்தன் ஜீவச்ச்ராத்தம் பண்ணிக்கொள்ளக் கடவன் என்றும் சாஸ்த்ர விதிப்ரகாரமாகத் தானே பண்ணுகிற ஜீவச்ச்ராத்தத்தில் தனக்கு மாத்ரமே பத்து நாட்கள் ஆசௌசம் ஒழிய ஜ்ஞாதிகளுக்கும் மற்றபேருக்கும் ஆசௌசம் இல்லை;' என்றுள்ளது.

இதனுல் கயாதிக்ஷேத்ரங்களில் அபுத்ரன் (புத்ரனில்லாதவன்) தனக்காகச் செய்துகொள்ளும் ஜீவச்ச்ராத்தத்தில் 10 நாட்கள் அவனுக்குத் தீட்டு உண்டென்று இதன் தாத்பர்யம் என்று ஏற்படுகிறது. இதில் 'அபுத்ரன்' என்றிருப்பதனுல் ஸம்ஸ்க்ருத வ்யாக்யானத்தில் 'अपुत्रा' என்கிற பதம் 'अपुत्रा' என்றிருக்கும் போல் தோன்றுகிறது. அந்தப் பாட பக்ஷத்திலேயே இங்குச் சொல்லும் அர்த்தம் ஸ்வரஸமாகப் படுகிறது.

இதில் புத்ரன் இல்லாதவன் க்ஷேத்ரங்களில் பண்ணும் ஜீவச்ச்ராத்தத்தில் அவனுக்கு தசாஹாசௌச விஷயத்தில் ஸம்சயமில்லை. அடுத்தபடியாக 'ஸந்ந்யாஸோத்யுக்தன் பண்ணும் ஜீவச்ச்ராத்தத்தில் அவனுக்கு தசாஹாசௌசம் என்கிற விஷயம் எப்படி? என்று யோசிக்க வேண்டியிருக்கிறது.

'ஸந்ந்யாஸியாக உத்தேசிக்கிறவர்கள் முதல் நாளில் ஜீவச்ச்ராத்தம் செய்து மறுநாளில் ஸந்ந்யாஸம் ஏற்றுக் கொள்ளுகிறார்களே! ஆசௌசம் அனுஷ்டிப்பதைக் காண வில்லையே! என்று கேட்டுக்கொண்டு வைத்யநாதீக்ஷிதீய-வர்ணாச்ரமகாண்டத்தில் இந்த ஜீவச்ச்ராத்தமானது எட்டு ச்ராத்தங்களைக் கொண்டதென்றும். "दैविकं चार्षिकं दिव्यं पित्र्यं मातृकमानुषे । भौतिकं चात्मनश्चान्ते चाष्टौ श्राद्धानि निर्वपेत्" என்பது போன்ற வசநங்களால்—தைவம், ஆர்ஷம், திவ்யம், பித்ருச்ராத்தம், மாத்ருச்ராத்தம், மானுஷச்ராத்தம், பூதச்ராத்தம், ஆத்மச்ராத்தம், என்று எட்டுவித ச்ராத்தங்களையும், அதில் ஒவ்வொன்றிலும் உத்தேச்ய தேவதைகளையும் சொல்லி மந்த்ரமுகமாக இவைகளைப் பண்ணவேணுமென்று சொல்லப்பட்டிருக்கிறது. இதில் எட்டாவதாகச் சொல்லப் பட்ட ஆத்மச்ராத்தத்திற்கு உத்தேச்ய தேவதை 'பரமாத்மா'

என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. யதிதர்மஸமுச்சயத்தி லும் 'ஆத்மச்ராத்தம்' பரமாத்மதேவதையை உத்தேசித் ததே என்று ஏற்படுகிறது. ஸந்ந்யாஸாங்கமான இந்த ஜீவச் ச்ராத்தத்தில் கர்த்தாவுக்கு உத்தேச்யத்வம் இல்லையாகை யால் தசாஹாசௌசம் சொன்னது இதின் விஷயமன்று என்று ஏற்படுகிறது.

நிர்ணயஸிந்துவில் बोधायनः-'कृत्वा श्राद्धानि सर्वाणि पित्रादिभ्योऽष्टकं पृथक्'...'सर्वाणि' इति स्वस्य 'नवश्राद्धषोडशश्राद्धादि कृत्वेत्यर्थः'॥ स्मृत्यर्थसारेऽपि 'एकोद्दिष्टविधानेन कुर्याच्छ्राद्धानि षोडश'...आत्मश्राद्धे आत्मपितृपितामहा देवताः' என்று - தன்னை உத்தேசித்து (ஏகோத் தேச்யகமாக) நவச்ராத்தம், ஷோடசச்ராத்தம் முதலியவை களைப் பண்ணிவிட்டு. முற்கூறிய எட்டு ச்ராத்தங்களை யும் சொல்லி அதில் ஆத்மச்ராத்தத்தில் (आत्मपितृपितामहाः) தான், பிதா, பிதாமஹன் இவர்கள் உத்தேச்யதேவதை களாகச் சொல்லப்பட்டிருக்கிறது. 'பரமாத்மா தேவதை' என்பதை தூஷித்திருக்கிறது. ஆக இதனால் இப்படி ஒரு பக்ஷம் உண்டு என்று ஏற்படுகிறது. இதிலும் இவைகளை நாந்தீமுகமாகவே செய்யவேணுமென்று சொல்லப்படுகிறது. இதில் சொல்லப்படுகிற ஆத்மச்ராத்தம், 'தான், பித்ரு, பிதா மஹன்' என்கிற மூன்று புருஷர்களை உத்தேச்யமாகக் கொண்டதானபடியால் இதற்கு முன்பு தன்னை மாத்ரமே உத்தேச்யமாகக் கொண்டு செய்யப்பட வேண்டியதாகச் சொல்லப்பட்ட (இறந்தவனுக்குச் செய்யப்படுவது போன்ற) நவச்ராத்தாதிகளைச் செய்யும் போது அவனுக்கு 10 நாட்கள் ஆசௌசம் என்று அதை விஷயமாகக் கொண்டது 'ஜீவச் ச்ராத்தத்தில் 10 நாட்கள் ஆசௌசவிதி' என்று ஏற்படு கிறது. நாந்தீமுகமாக செய்யப்படும் ஜீவச்ராத்தவிஷயமன்று என்று கொள்ளவேணும்.

2) ஆசௌசசதகம் 78வது ச்லோகத்தில் 'सद्योऽन्येषु सदा भिक्षुः' என்று ஸந்ந்யாஸிகளுக்கு ஜ்ஞாதிகள் விஷயத்தில் 'ஸத்ய: சுத்தி' அதாவது ஸ்நாநமாத்ரத்திஞல் சுத்தி என்று பொதுவாகச் சொல்லப் பட்டுள்ளது. வைத்யநாதீயவர்ணா-ச்ரமகாண்டத்தில் 'न स्नानमाचरेद् भिक्षुः पुत्रादिनिधने श्रुते । पितृमातृ-क्षयं श्रुत्वा स्नात्वा शुध्यति साम्बरः' என்று ஸந்ந்யாஸிகள் மாதாபிதாக்களின் மரணத்தைக் கேட்டால்தான் ஸசேலமாக ஸ்நாநம் செய்ய வேண்டும் என்றும், புத்ரன் முதலியவர்களின் மரணத்தைக் கேட்டால் ஸ்நாநம் செய்யக்கூடாதென்றும் நிஷேதமிருப்பதால் (இவ் வசநம் யதிதர்மஸமுச்சயத்திலுள்ளதாக நிர்ணயஸிந்துவில் குறிப்பிடப் பட்டுள்ளது.) முற் கூறிய ஸ்நாநவிதி மாதாபித்ருக்கள் விஷயமென்று நிர்ணயிக்கவேண்டுமென்று ஏற்படுகிறது.'

